# புத்தக அறிமுகம்

# கிறிஸ்தியாநகரம் மிஷன் சரித்திரம்

ஆக்கியோன்

**பேராசிரியர்.அருள்திரு.D.A. கிறிஸ்துதாஸ்**
**B.A.,L.T.,B.D.,M.Th.**




பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் (1912- 1990) அவர்கள் தென் இந்தியாவின் ஆக்ஸ்போர்டு என்று அழைக்கப்படும் பாளையங்கோட்டையில் பிறந்து, வளர்ந்தவர். பள்ளி ஆசிரியர், வேதாகமக் கல்லூரி பேராசிரியர், முதல்வர், அருட்பணியாளர் மற்றும் எழுத்தாளர் என பல துறைகளிலும் ஜொலித்தவர். திருச்சபையின் வரலாறு மற்றும் திருச்சபையின் வெற்றிக்குக் காரணமான தேவ மனிதர்கள் பற்றி நாம் அறிந்து கொள்ள இவர் எழுதிய நூல்கள் ஒரு திறவுகோல் என்றால் அது மிகையாகாது. எளிய மற்றும் வட்டார வழக்கு தமிழில் எவரும் புரிந்து கொள்ளும்படி ஆராய்ச்சி மற்றும் வரலாற்றுப் புத்தகங்களை எழுதுவது இறைவன் இவருக்குக் கொடுத்த வரம். அநேக புத்தகங்களை மட்டுமல்ல, அநேக கிறிஸ்தவ தலைவர்களையும் இவர் தன் திருப்பணி மூலமாக உருவாக்கி இருக்கின்றார்.

பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் அவர்கள் மறைந்து கிடந்த ஏடுகளையும் இலக்கியங்களையும் தேடி எடுத்து, இச்சரித்திரத்தை பூர்வீக நூல்களை ஆராய்ச்சிசெய்து, பல பெரியோர்களை கண்டு, பேசி இச்சரித்திரத்தை பத்து வருடங்களுக்கு மேல் ஆராய்ச்சி செய்து நமது கைகளில் கொடுத்துள்ளார். எளிய மற்றும் வட்டார வழக்கு தமிழில் எவரும் புரிந்து கொள்ளும்படி ஆராய்ச்சி மற்றும் வரலாற்றுப் புத்தகங்களை எழுதுவது இறைவன் இவருக்குக் கொடுத்த வரம். அநேக நூல்களை மட்டுமல்ல, அநேக கிறிஸ்தவ தலைவர்களையும் இவர் தன் திருப்பணி மூலமாக உருவாக்கி இருக்கின்றார்.

அவர் இயற்றியுள்ள **"கிறிஸ்தியாநகரம் மிஷன் சரித்திரம்"** நூலுக்காக நான் முதற்கண் பராபரனைப் போற்றுகின்றேன். கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் சார்பாக மறுபதிப்புக்கு அனுமதித்த அவர்கள் குடும்பத்திற்கும், மறுபதிப்பு நூலை வெளியிட உதவின கிறிஸ்தியாநகரம் - பண்டாரஞ்செட்டிவிளை மத்திய சொத்துக் கமிற்றி உறுப்பினர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**சரித்திரத்தில் பின்னோக்கிப் பார்க்கிறோம். எதிர்காலத்தை முன்னோக்குடன் பார்ப்போம்**

**கிறிஸ்தியாநகரம் – பண்டாரஞ்செட்டிவிளை மத்திய சொத்துக் கமிற்றி**

**வெளியீடு**

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்**

**பதிப்பு**



ஆசிரியரைப் பற்றி..

பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் (1912-1990) அவர்கள் தென் இந்தியாவின் ஆக்ஸ்போர்டு என்று அழைக்கப்படும் பாளையங்கோட்டையில் பிறந்து, வளர்ந்தவர். பள்ளி ஆசிரியர், வேதாகமக் கல்லூரி பேராசிரியர், முதல்வர், அருட்பணியாளர் மற்றும் எழுத்தாளர் என பல துறைகளிலும் ஜொலித்தவர். திருச்சபையின் வரலாறு மற்றும் திருச்சபையின் வெற்றிக்குக் காரணமான தேவ மனிதர்கள் பற்றி நாம் அறிந்து கொள்ள இவர் எழுதிய நூல்கள் ஒரு திறவுகோல் என்றால் அது மிகையாகாது. எளிய மற்றும் வட்டார வழக்கு தமிழில் எவரும் புரிந்து கொள்ளும்படி ஆராய்ச்சி மற்றும் வரலாற்றுப் புத்தகங்களை எழுதுவது இறைவன் இவருக்குக் கொடுத்த வரம். அநேக புத்தகங்களை மட்டுமல்ல, அநேக கிறிஸ்தவ தலைவர்களையும் இவர் தன் திருப்பணி மூலமாக உருவாக்கி இருக்கின்றார்.

பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்கள் மறைந்து கிடந்த ஏடுகளையும் இலக்கியங்களையும் தேடி எடுத்து, இச்சரித்திரத்தை பூர்வீக நூல்களை ஆராய்ச்சிசெய்து, பல பெரியோர்களை கண்டுபேசி இச்சரித்திரத்தை பத்து வருடங்களுக்கு மேல் ஆராய்ச்சி செய்து நமது கைகளில் கொடுத்துள்ளார். எளிய மற்றும் வட்டார வழக்கு தமிழில் எவரும் புரிந்து கொள்ளும்படி ஆராய்ச்சி மற்றும் வரலாற்றுப் புத்தகங்களை எழுதுவது இறைவன் இவருக்குக் கொடுத்த வரம். அநேக நூல்களை மட்டுமல்ல, அநேக கிறிஸ்தவ தலைவர்களையும் இவர் தன் திருப்பணி மூலமாக உருவாக்கி இருக்கின்றார்.

அவர் இயற்றியுள்ள **"கிறிஸ்தியாநகரம் மிஷன் சரித்திரத்தை"** நாம் பின்னோக்கிப் பார்க்கிறோம். எதிர்காலத்தை முன்னோக்குடன் பார்ப்போம். முன் காலத்தில் குழந்தைகளைப்போல் வளர்க்கப்பட்டோம். வருங்காலத்தில் வீரர்களைப்போல வாழ்வோம். முன்னாளில் பிறர் சேவைகளைப் பெற்றோம். வருநாளில் பிறர்க்குச் சேவை செய்வோம். அதற்காகவே அழைக்கப்பட்டோம்.

# ஆசிரியர் சுவடு

**கிறிஸ்துவுக்குள் அன்பான சுவடுகள் வாசகர்களே,**

ஆண்டவரும், மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் இனிய கிறிஸ்துமஸ் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இம்மாத இதழை உங்களிடத்தில் கொண்டு வருவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். இந்த வருடத்தின் இந்த பன்னிரண்டு மாதங்களிலும் பராபரன் நமது வரலாற்றுச் சங்கத்தை சிறப்பாக நடத்தி வந்ததை நினைத்து மகிழ்கின்றோம். **“பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்”** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும்போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுத்துக்கொண்டே இருக்கின்றன.

வரலாற்றுச் சங்க திட்டங்களில் ஒன்றான பழைய புத்தகங்களை மறுபதிப்பு பணியில் இந்தாண்டு இருபத்திஜந்து புத்தகங்கள் வரை வெளியிட்டு உள்ளோம். வரும் ஆண்டுகளில் புதிய புத்தகங்கள் மற்றும் மறுபதிப்பு புத்தகங்களையும் சேர்த்து நூறு புத்தகங்களை வெளியிட செயல்பட்டு வருகின்றோம். தொடர்ந்து ஜெபித்துக்கொள்ளுங்கள். கடந்த மாத இதழில் அறிவித்தபடி இளைஞர்களுக்கான பயிற்சி பட்டறை ஏற்படுத்தி அதன் மூலமாக புதிய எழுத்தாளர்களை உருவாக்கவும் திருச்சபை வரலாற்றையும், இன்றைய மிஷனெரி ஊழியர்களையும், ஊழியங்களை பற்றிய வரலாற்று நிகழ்வுகளை வரும் ஆண்டு முழுவதும் கொண்டு செல்ல முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றோம்.

வரலாற்றுச் சங்கத்தின் மூலமாக வெளிவரும் புத்தகங்களை வெளியிடும் பணிகளில் நீங்களும் உங்கள் குடும்பத்தின் சார்பாக இணைந்து வெளியிட முன்வரலாம்.

ஒவ்வொரு மாதமும் மாத இதழினை வெளிக்கொண்டு வருவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு, தேவைகள் சந்திக்கப்பட ஜெபித்துக்கொள்ளுங்கள். சந்தா, நன்கொடைகளை அனுப்ப இதழின் பக்கங்களிலிருக்கும் வங்கிக் கணக்குகளை பயன்படுத்திக்கொள்ளுங்கள். எல்லாவற்றிற்கும் மேலாக நண்பர்களுக்கு இப்புத்தகத்தை அறிமுகப்படுத்தி அவர்களை சந்தாதாரர்களாக்குங்கள். தொடர்ந்து வரலாற்று ஊழியங்களுக்காக ஜெபித்துக் கொள்ளுங்கள்.

வரும் ஜனவரி மாத தலைப்பாக **“பிற மத சமுதாய மக்களுடன் நமது உறவு”** என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகளை எழுதி அனுப்ப அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

பாரபரனின் பணியில்

*manna selvakumar*

MERRY XMAS




# அருள்திரு ஏ. ஹெச். லாஷ்
# 1839 - 1932

**Rev. Dr. Prof. Devaraj Mathan**
**Gudalur, The Nilgiris.**

நீலகிரி மாவட்டம் உதகமண்டலத்தில் திருச்சபை அருட்பணி சங்கத்தின் (Church Mission Society C. M. S) உதகமண்டல தமிழ் அருட்பணியின் (Ootacamund Tamil Mission O. T. M) முக்கிய அருட்பணியாளரும், நீலகிரியின் மற்றும் வைநாடு நிரந்தர அருட்பணியின் முதல் அருள் பணியாளர் அருள்திரு ஏ.ஹெச். லாஷ் (Rev. A. H. Lash) அவர்கள் ஆவார். லாஷ் (Lash) என்றப் பெயருக்கு கண் இமை என்றுப் பொருள், அது போல் அருள்பணியை கண்மணிப் போல் காத்து நடத்தி வந்தார். இவர் 1893 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 1 ஆம் தேதி முதல் 1907 ஆம் ஆண்டு வரை சுமார் பதினான்கு ஆண்டுகள் நீலகிரி மற்றும் வயநாடுப் பகுதிகளில் அரும் பணியாற்றியவர். இவரது திருப்பணிக் காலம் நீலகிரி மற்றும் வயநாடு பகுதிகளின் திருச்சபை அருட்பணிச் சங்கத்தின் பொற்காலம் எனக் கூறினால் அது மிகையல்ல.

1839 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8 ஆம் நாள் இங்கிலாந்திலுள்ள கோகர்க் என்னும் இடத்தில் பக்தியுள்ள பெற்றோருக்கு ஏ. ஹச். லாஷ் (A. H. Lash) அவர்கள் செல்லப்பிள்ளையாகப் பிறந்தார். இவர் தம் தொடக்க கல்வி முதல் இறையியல் கல்வி வரை மிகச் சிறப்புடன் கற்றுத் தேர்ந்து, 1867 ஆம் ஆண்டு தம் 28 ஆம் வயதில் இங்கிலாந்து திருச்சபையின் அருட்பணி ஆயராக அருட்பொழிவுப் பெற்று 1869 ஆம் ஆண்டு தமது 30 வது வயதில் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தார். தமிழகத்தில் வந்து தமிழ் மொழியைக் கற்று, தமிழ் மொழியில் சிறந்த அறிவும் புலமையும் பெற்றார், இவர் திருநெல்வேலிப் பகுதியில் ஆற்றிய பணிகள் அளப்பறியது, இவர் இந்தியர்களை குறிப்பாக தமிழ் மக்களை மிகவும் அதிகமாக நேசித்தார்.

1869 ஆம் ஆண்டு முதல் 1880 ஆம் ஆண்டு வரை சுமார் 11 ஆண்டுக்காலம் திருநெல்வேலியில் உள்ள பாளையம்கோட்டை சாராள் தக்கர் தொடக்கப் பள்ளியின்

**லாஷ் (Lash) என்ற பெயருக்கு கண் இமை என்றுப் பொருள்**

தலைமை ஆசிரியராக அரும்பணியாற்றினார். 1 முதல் 3 வகுப்பு வரை நடந்து கொண்டிருந்த தொடக்கப் பள்ளி இவரது துணைவியார் திருமதி. லாஷ் அவர்களின் பெரும் முயற்சியாலும், வழிகாட்டுதலாலும் 4 ஆம் வகுப்பு முதல் 8 ஆம் வகுப்பு வரை நடுநிலைப் பள்ளியாக தரம் உயர்த்தப்பட்டது. நடுநிலைப் பள்ளி என்ற உயர் நிலையை அடைந்தது எனலாம். அன்றைய சாராள் தக்கர் பள்ளி இன்றைக்கு சாராள் தக்கர் கல்லூரியாக வளர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இவர் திருநெல்வேலியின் இதரப் பகுதிகளில் அருள்பணியாற்றியக் காலத்தில் இவரால் நிறுவப்பட்ட கல்விக் கூடங்கள் பற்பல அவற்றில் சில இன்றைக்கு கல்லூரிகளாக தரம் உயர்த்தப்பட்டுள்ளது என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். திருநெல்வேலி அருட்பணித் தளம் விடுத்து திருவிதாங்கூர் பகுதிக்கு 1890 ல் சென்று அப்பகுதியில் 1893 ஆம் ஆண்டு வரை மூன்றாண்டுகள் ஆற்றிய பணிகள் சிறப்புக்குறியதாக கருதப்படுகின்றது.

1893 ஆம் ஆண்டு அவரது 54 ஆம் வயதில் உதகமண்டலத்திற்கு மாறுதல் பெற்று நீலகிரி பணிதளத்தின் மாவட்ட அருட்பணியாளராகவும், கண்காணிப்பாளராகவும் பொறுப்பேற்று ஜனவரி 4 ஆம் தேதி 1897 ஆம் ஆண்டு வந்துச் சேர்ந்தார். குறிப்பாக உதகமண்டலத்தை மையப்படுத்தி உதகமண்டலம், கோத்தகிரி மற்றும் குன்னூர் ஆகிய இடங்களில் நடந்த திருப்பணிகளையும், கூடலூரை மையமாகக் கொண்டு வயநாடு (Wynad) பகுதியின் மீதும் அதிக கவனம் செலுத்தி அருட்பணியின் தரத்தை உயர்த்தி அதன் வளர்ச்சிக்காக திருச்சபை அருட்பணி சங்கத்தின் தலைமை செயலரிடம் ரூபாய் 500.00 நன்கொடையாகப் பெற்று (அந்நாளின் ரூபாய் 500.00 என்பது இன்றைய மதிப்பில் ஒருவேளை ரூபாய் 5,00,000.00 க்கு மேல் இருக்கும் என நம்புகின்றேன்) அருட்பணியினைத் தீவிரப் படுத்தினார். இவரது நாட்களில் நீலகிரி மற்றும் வைநாடு ஆகியப் பகுதிகளில் உபதேசியார்கள் அல்லது நற்செய்தியாளர்கள் சுமார் 20 பேர் இவரோடு இணைந்து பணிச் செய்தனர். அந்நாட்களில் வயநாடு அருட்பணியானது பைக்காரா ஆற்றின் கிழக்கே கூடலூர் (Gudalur), ஓவேலி (O'Vally), பந்தலூர் (Panthalur), வைத்திரி (Vaithree), மேப்பாடி (Mapady), சுல்தான் பத்தேரி (Sultan Battery), மற்றும் மானந்தவாடி (Mahnanthvady) வரை பரந்து விரிந்துக்கிடந்தது. இப்பகுதிகளில் திருச்சபை அருட்பணி சங்கத்தின் முகவர்கள் (உபதேசியார்கள், இந்திய ஆயர்கள் மற்றும் அருட்பணியாளர்கள்) மற்றும் நிலைய பணியாளர்களை மேற்பார்வைச் செய்வதற்கும், அருட்பணிக்கு வலுச்சேர்க்கும் வண்ணமாகவும் மூன்று மாதத்திற்கு ஒரு முறை அனைவரையும் சந்தித்து அருட்பணியில் ஊக்கப்படுத்திச் செல்வார்.

வயநாடு பகுதி அந்நாட்களில் பொதுவாக அனைவருக்கும் குறிப்பாக ஐரோப்பியருக்கு உகந்த இடமல்ல, ஏனெனில் இப்பகுதி வனக்காய்ச்சல் மற்றும் மலேரிய அதிகமாக இருந்த இடம். அந்நாட்களில் வயநாடு பகுதிகளுக்கு போக்குவரத்து என்பது அவ்வளவு எளிதான ஒரு செயலாக இருக்கவில்லை என்பதனை என் வாசகர்கள் மனதில் கொள்ள வேண்டும். எனவே அருள்திரு லாஷ் அவர்கள் மிகுந்த தியாகத்துடனே இப்பகுதியில் அருட்பணியாற்றினார் எனில் அது மிகையாகிடாது.



இதனிடையே ஆயர் அவர்கள் 1898 ஆம் ஆண்டு நட்டிங்ஹாம் Nottingham சென்றார். அங்கு தன் அன்பு மகள் கேத்தரின் லாஷ் Katharine Lash அவர்களை சந்தித்தார் அந்த சந்திப்பு மகிழ்ச்சி நிறைந்த ஓர் சந்திப்பாக இருந்தது. கேத்தரின் லாஷ் Katharine Lash அவர்கள் தென்னிந்தியாவில் பிறந்தவர்கள் 1898 ஆம் ஆண்டு கேத்ரின் லாஷ் Katharine Lash அவர்கள் அருள்திரு ரிகின்லெட் பேஜ் Reginald Page அவர்களை மணமுடித்தார். அருள்திரு ரிகின்லெட் பேஜ் Reginald Page அவர்கள் தூய யோவான் திருமுழுக்கர் தேவாயத்தின் குருவானவராக பணியாற்றினார். Vicar st John the Baptist Church. இவர் ஒரு சிறந்த ஓவியருமாவார். 1935 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 7 ஆம் நாள் திருமதி கேத்ரின் பேஜ் அவர்கள் மரணமடைந்தார்.

ஆயர் அவர்கள் குறிப்பாக பந்தலூர் பகுதியில் அந்நாட்களில் தங்கம் வெட்டி எடுக்கும் தொழில் மிகத் தீவிரமாக நடந்தமையால் பந்தலூர் மற்றும் தேவாலா பகுதிகளில் குடியிருந்த ஐரோப்பியருக்கு இவரது உதவி மிகவும் அதிகமாகத் தேவையிருந்தது என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். 1907 ஆம் ஆண்டு வரை நீலகிரிப் பகுதியில் மிகச் சிறப்பாக அருட்பணியாற்றிய ஆயர் அவர்கள் 1909 ஆம் ஆண்டு தமது 42 ஆண்டு அல்லும் பகலும் ஆற்றிய அருட்பணியிலிருந்து பணி மூப்பு ஓய்வுப் பெற்று தம் தாயகமான இங்கிலாந்துச் சென்றார்.

1932 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 8 ஆம் நாள் தமது 94 ஆம் வயதில் கிறிஸ்துவுக்குள் தமது நல்ல ஓட்டத்தை முடித்து இங்கிலாந்திலுள்ள ஹான்வால் என்னும் இடத்தில் நித்திய இளைப்பாறுதலுக்குள் நுழைந்தார்.

அருள்திரு ஏ.ஹெச். லாஷ் (Rev. A. H. Lash) அவர்கள் இயற்றிய யாம் அறிந்த இரண்டு நூல்கள்

1. Blossoms and Fruit of Missionary Work or What Indian Girls Can Do (London: ohn F. Shaw & Co., 1885)
2. An Old Missionary's Portrait gallery

# புனிதர்
# மொலோகாய் டேமியன்

**Mrs.Niruba Jesudian**
**MIM, Chennai**



மரணபரியந்தம் உண்மையாயிரு, அப்பொழுது ஜீவகிரீடத்தை உனக்குத் தருவேன் (வெளி 2:10).

பசிபிக் மகா சமுத்திரத்தில் மொலாக்காய் (Molokai Island) என்பது சிறு தீவு தென்பசிபிக் தீவில் குஷ்டரோகம் எனப்படும் தொழுநோய் பரவிய நாட்கள். தொழுநோயால் தாக்கப்பட்டோர் மொலாக்காய் என்னும் இத்தீவில் தான் தனிமைப்படுத்தப்பட்டு, கவனிப்பாரற்று தங்கள் வாழ்வை கழித்தனர். மக்களால் மட்டுமல்ல, கடவுளாலும் கைவிடப்பட்டு விட்டோம் என்ற முடிவுக்கு வந்தனர். அவர்களுக்கு உதவி செய்யவும், நோயின் கொடுமையிலிருந்து அவர்களை காப்பாற்றவும் யாரும் முன் வரவில்லை. காரணம் அத்தீவிற்கு சென்றவர்கள் மீண்டும் தங்கள் நாட்டிற்கு திரும்பி வரக்கூடாது என்பது அரசாங்கத்தின் உத்தரவு.

1873-ஆம் ஆண்டு துன்பத்தில் துவண்ட அம்மக்களுக்கு துணைவனாக அம்மக்களை தேடி புறப்பட்டான் ஒரு இளைஞன். அவர் தான் டாமியன் ஆவார். பலர் அவரை தடுத்தனர். ஆனால் டாமியனோ தன் தீர்மானத்தில் உறுதியாய் இருந்தார். மொலாக்காய் தீவில் இறங்கிய உடன் அங்கு அவர் கண்ட காட்சிகளோ கொடுமையாய் இருந்தன. வியாதியின் கொடுமையால் நடைபிணங்களாக, உடலெல்லாம் புண்களாக, சீழ் வடிந்த நிலையில் மக்கள் வாழ்ந்தனர். அவர்களின் வாழ்வில் நம்பிக்கை கொடுக்க ஆரம்பித்தார் டாமியன். அவர் அங்கு வந்த பிறகு அநேக மாற்றங்களை அந்த தீவில் அவர் கொண்டு வந்தார். குடிசையில் வாழ்ந்த மக்கள் வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டு, வீடுகளில் வாழ ஆரம்பித்தனர். பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டன. அநேக நன்மைகளை அந்தத் தீவு மக்கள் அனுபவிக்க ஆரம்பித்தனர். அவர்களின் புண்களை காயம் கட்டினார். மருந்துகளைக் கொடுத்து ஜனங்களை ஆறுதல் படுத்தினார்.

ஒரு நாள் அவர் குளிக்கச் செல்லும் போது தற்செயலாக கொதிக்கும் தண்ணீர் அவருடைய கால்களில் பட்டது. ஆனால் அவர் அதை உணரவில்லை, அதிர்ச்சியடைந்தார். ஓ, அவருக்கும் தொழுநோய் பற்றி கொண்டது. அதிர்ச்சியில் இருந்து மீண்டு வந்த டாமியன் அத்தீவு மக்களிடம் நான் இப்போது உங்களில் ஒருவனாகி விட்டேன் என்று கூறினார். அவ்வார ஞாயிறு ஆராதனையில் தொழு நோயாளியாகிய நம்மில் தேவன் அன்பாய் இருக்கிறார் என்று ஆண்டவரை புகழ்ந்தார். நோயின் கொடூரம் அவரை முற்றிலும் தாக்கவே, தான் அளவு கடந்து அன்பு வைத்த மக்களை விட்டு, தனது 49- வது வயதில் மரித்தார். தனது அர்ப்பணிப்பில் இருந்து பின்னிட்டு பாராமல் தன் உடலையும், உயிரையும் தொழு நோயாளிகளுக்காய் கொடுத்த வாலிபன் டாமியனின் அர்ப்பணிப்பும், கர்த்தர் மேல் இருந்த அன்பை மற்றவர்களுக்கு பகிர்ந்து கொடுத்து, தேவனின் அன்பை வெளிப்படுத்திய விதமும், தங்களை கவனித்து பராமரிக்க யாருமே இல்லை என்று தவித்த மொலாக்காய் தீவின் மக்களுக்கு, **'அவர்களையும் தேவன் நேசிக்கிறார்'** என்பதை எடுத்துக்காட்டினார். அந்த வாலிபனின் அர்ப்பணிப்பும் நிச்சயமாக மற்றவர்களுக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும்.

பிரியமானவர்களே, நம்முடைய அர்ப்பணிப்பு எத்தன்மையுடையது? நான் கிறிஸ்துவுக்காக என்னை அர்ப்பணித்தால் அவர் எனக்கு என்ன தருவார்? என்றும், தங்கள் பெயர், புகழ் வர வேண்டும் என்றும், ஒவ்வொருவரும் வாழுகின்ற இந்த நாட்களில், **'என் உயிர், உடல் அனைத்தும் கிறிஸ்துவுக்கே. வாழ்ந்தாலும் கிறிஸ்துவுக்காய் வாழ்வேன்; மரித்தாலும் கிறிஸ்துவுக்காய் மரிப்பேன்'** என்ற முழுமையான அர்ப்பணிப்பு நம் ஒவ்வொருவருக்கும் தேவை.

நம் வாலிபமும், நம் வாழ்வும் கிறிஸ்துவுக்கே என்று மாறட்டும். தங்களை கர்த்தருக்கென்று அர்ப்பணித்து உண்மையாய் வாழ்ந்த எத்தனையோ பரிசுத்தவான்கள் நம் நாட்டிலும் உண்டு.

ஆம்! **'நாம் வாழ்ந்தாலும் கர்த்தருக்காக, மரித்தாலும் கர்த்தருக்காக'** என்று ஜீவிக்க வேண்டும். அத்தகைய அர்ப்பணிப்பு நம் ஒவ்வொருவருக்கும் தேவை.




# டேனியல் பூர்
## (Rev. Daniel Poor)

Dr. S. STEPHEN RAJKUMAR
INBANATHAN, MADURAI

1816 இல் யாழ்ப்பாணத்தில் அமெரிக்கன் சிலோன் மிஷனைத் தொடங்கிய அமெரிக்க வாரியத்தின் முன்னோடி மிஷனரிகளில் ஒருவரான டேனியல் பூர் ஜூன் 27, 1789 ல் ஜோசப் பூர் மற்றும் மேரி (ஆபட்) பூர் தம்பதியினரின் 12 ஆவது பிள்ளையாக டென்வர், மாசச்சூசஸ்ட்டில் பிறந்தார். 1835 ஆம் ஆண்டில் அமெரிக்க மதுரா மிஷனை நிறுவியவர்களில் இவரும் ஒருவர்.

பிலிப்ஸ் அக்காடமி அண்டோவர் (Phillips Academy, Andover Theological seminary) கல்வி நிறுவனத்தில் 1805 லும் டார்ட்மவுத்தில் 1811 லும் பட்டங்கள் பெற்று 1814 ல் தனது இருபத்தைந்தாவது வயதில் அண்டோவர் இறையியல் செமினரியில் பட்டம் பெற்றார். மாசசூசெட்ஸ் மாகாணத்தில் நியூபரிபோர்ட் பிரெஸ்பிடேரியன் சபையில் 1815 ஆம் ஆண்டு மதப்பணியாளராக திருப்பொழிவு (Ordination) பெற்றார். அமெரிக்காவின் மாசசூசெட்ஸின் சேலத்தை சார்ந்த சூசன் பல்பிஃஞ்சை அக்டோபர் 9, 1815 ல் மணம் புரிந்தார். திருமணம் முடிந்து இரண்டு வாரங்களில் பூர் இலங்கை கிளம்பினார். 18-10-1835-ல் டேனியல் பூர் இந்தியாவிற்கு மாற்றப்பட்டு மதுரைக்கு வந்தார். அவர் தனது மிஷனரி பணியை உடனடியாக தொடங்கினார். ஊரில் உள்ள அனைத்து பள்ளிகளையும் பார்வையிட்டார். சில வாரங்களுக்குப் பிறகு, கலெக்டர் ஏற்பாடு செய்த பொதுக் கூட்டத்தில் கலந்து கொண்டார். அந்த கூட்டத்தில் சுமார் 700. பொதுமக்கள் கலந்து கொண்டனர். டேனியல் பூர் சிலோன் மிஷன் பின்பற்றிய பள்ளி முறையை விவரித்தார், அவரும் அவரது சக மிஷனரிகளும் மதுரையில் இதே போன்ற பள்ளிகளைத் தொடங்கப் போவதாக அவர் அறிவித்தார். இந்த யோசனைக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. புதிய மிஷன் பள்ளிகள் தொடங்கப்பட்டன. ஆகஸ்ட் 12, 1840 மிஷன் பள்ளிகளின் பொது கண்காட்சி அரண்மனையில் நடைபெற்றது, அதில் 1,000 குழந்தைகள் இருந்தனர். பார்வையாளர்களின் கூட்டம் அதிகமாக இருந்தது. டேனியல் பூர் மதுரையில் ஆறுவருடங்கள் இருந்தார். முப்பத்தேழு பள்ளிக்கூடங்களை நிறுவினார். ஊர்கள் தோறும் சென்று மதபோதனை செய்து, கல்விநிலையங்களை உருவாக்கினார். 1836 ல் திண்டுக்கல், திருமங்கலம் ஆகிய ஊர்களிலும் 1838 ல் திருபுவனத்திலும் அமெரிக்க பள்ளிகள் தொடங்கப்பட்டன. பூர் மதுரை அமெரிக்கன் மிஷனை வலுப்படுத்தினார்.

டாக்டர் டேனியல் பூரின் பேத்தியான திருமதி சாமுவேல் ஏ மோர்மன், மதுரை அமெரிக்கன் கல்லூரியில் நூலகம் கட்டுவதற்கான பணிக்கு $ 25,000.00 நன்கொடையாக வழங்கினார். ஜனவரி 26, 1926 அன்று நூலகக் கட்டிடத்திற்கான மூலைக்கல் நாட்டப்பட்டது. டேனியல் பூர் 1854 ல் இலங்கை-மானிப்பாயில் பரவிய காலராவினால் காலமானார். அப்போது அவருக்கு வயது 65. அவருடைய கல்லறை மானிப்பாயில் உள்ளது.




### திருச்சபை வளர்ச்சிக்கு பாடுபட்ட தொடக்ககால

# மிஷனெரிகளின் வரலாற்று பங்களிப்பு

**ஜா.ஜான் ஞானராஜ்**

திருச்சபை வளர்ச்சிக்கு பாடுபட்ட இரு தொடக்ககால மிஷனெரிகளின் வரலாற்று பங்களிப்பை இந்த ஆய்வு கட்டுரையில் காண்போம்.

**கனம்.ஜேம்ஸ் ஹாப்வ் ஐயரவர்களும் வரலாற்றுப் பணியும்**

'The History of Christianity in India' என்ற சிறப்பான வரலாற்று நூலை நான்கு தொகுதிகளாக வெளியிட்டு நற்செய்தி பணியுடன் சபை வரலாற்று பணியையும் சிறப்பாகச் செய்தவர்கள். கனம். ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்களால் இந்நூலின் முதல் இரு தொகுதிகள் 1839 லும், கடைசி இரு தொகுதிகள் 1845 லும் வெளியிடப்பட்டது.

**தோற்றமும் கல்வியும்**

கிரேட் பிரிட்டனில் 1789 ல் கும்பர்லேண்ட் என்ற ஊரில் கனம்.ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்கள் பிறந்தார். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் உயர் கல்வி கற்று M.A. பட்டம் பெற்றார்.

**அருட்பொழிவும் இராணுவ குருவானவர் பொறுப்பும்**

1814 இல் இங்கிலாந்தில் உள்ள கார்லிசில் ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்கள் குருவானவராக அருட்பொழிவு பெற்றார். ராணுவ குருவானவராகச் செல்ல கிழக்கிந்திய கம்பெனி நிர்வாகத்திற்கு விண்ணப்பித்த அவர் ராணுவ குருவாக தேர்ந்தெடுக்கப்பட்டு கல்கத்தாவிற்கு 1816 இல் அனுப்பப்பட்டார். அக்காலத்து ஒன்றுபட்ட திருநெல்வேலி மாவட்டத்தில் மிஷனெரி இன்றி திருச்சபை மக்கள் காணப்பட்டனர். 1814 இல் இந்தியாவுக்கென கல்கத்தாவில் மகாகனம். தாமஸ் மிட்டில்டன் பேராயராக நியமிக்கப்பட்டிருந்தார். ராணுவ குருவாக அனுப்பப்பட்ட ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்களை எந்த பட்டாளத்திற்கு அனுப்புவது என்ற முடிவெடுக்கும் அதிகாரம் பேராயரிடம் இருந்தது. ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்களின் நற்செய்தி அறிவிக்கும் ஆர்வத்தைக் கண்ட பேராயர் அக்காலத்தில் போதகர் இன்றி தவித்த ஒன்றுபட்ட திருநெல்வேலி மாவட்ட சபையாருக்கு பயனாக இருக்கும் என்றெண்ணி அவரை பாளையங்கோட்டை பட்டாளத்திற்கு ராணுவ குருவாக அனுப்பி வைத்தார்.

**பாளையங்கோட்டையிலும் சுற்று வட்டாரத்திலும் செய்த நற்செய்தி**

**பணி மற்றும் கல்விப்பணி**

1816 இல் பாளையங்கோட்டையில் ராணுவ குருவாக பொறுப்பேற்ற ஹாப்வ் ஐயரவர்கள். தமக்கு கொடுக்கப்பட்ட பணியோடு ஓய்வு நேரங்களில் ஏற்கனவே திருநெல்வேலி மாவட்டத்தில் இருந்த சபைகளையும் சந்தித்ததோடு நற்செய்தியும் அறிவித்து புதிய சபைகளையும் நிறுவினார். இறைபணியோடு பாளையங்கோட்டையில் கோட்டைக்குள் ஒரு ஆங்கில பள்ளியையும் கோட்டைக்கு வெளியே முருகன்குறிச்சியில் தமிழ் பள்ளியையும் நிறுவி நேரடியாக கண்காணித்தார். இந்த முருகன்குறிச்சி பள்ளியே தற்போதைய கதீட்ரல் மற்றும் மேரிசார்ஜென்ட் பள்ளிகளுக்கு தாய் பள்ளி.

1818 இல் ஆசிரியர்கள் மற்றும் சபை ஊழியர்களை உருவாக்க செமினரியைத் தொடங்கினார். அதற்காக திருநெல்வேலி திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் வண்ணார்பேட்டையை அடுத்து நெடுஞ்சாலையின் தென் புறம் பெரிதானதோர் நிலத்தை வெங்கு முதலியாரிடம் இருந்து வாங்கினார் ( தற்போதைய கதீட்ரல் மற்றும் மேரி சார்ஜென்ட் மேல்நிலை பள்ளிகள் இருக்கும் இடங்கள்).

**பிற இடங்களில் நற்செய்தி பணிகளும் கல்விப் பணிகளும்**

1816 இல் ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்கள் பாளையங்கோட்டையில் குடியேறிய போது அக்கால ஒருங்கிணைந்த திருநெல்வேலி மாவட்டத்தில் S.P.C.K மிஷன் ஊழியத்தின் 53 சபைகளும் 3000 சபை மக்களும் மிஷனெரி இல்லாமல் இருந்தனர். ராணுவ குரு பணியோடு கூட S.P.C.K சபைகளை கண்காணிக்கும் பொறுப்பையும், அதோடு கூட புதிய சபைகளை உருவாக்கும் பணிகளையும் செய்து வந்தார். ஹாஃப்வ் ஐயரவர்களால் மூக்குப்பீறி, சிதம்பரபுரம் கிராமங்களில் சபைகளும் குலசேகரன்பட்டினம், பத்மநாபபுரம், தருவை உக்கிரன்கோட்டை ஆகிய ஊர்களில் பள்ளிக்கூடங்களும் நிறுவப்பட்டது.

1818 இல் நாசரேத்தில் செமினரி மற்றும் ஆண்களுக்கான பள்ளி, 1820 இல் நாசரேத்திலும், முதலூரிலும் பெண்களுக்கான பள்ளிகள் அவரால் நிறுவப்பட்டது.

**பாளையங்கோட்டைக்கு மிஷனெரிகளை அனுப்பக் கேட்டு மிஷன் சங்கங்களுக்கு கனம்.ஹாப்வ் ஐயரவர்கள் கடிதம் எழுதுதல்**

தென்தமிழகத்தில் S.P.C.K மிஷனெரி சங்கம் 53 சபைகளையும் 3,000 சபை மக்களையும் கொண்டிருந்தும் மிஷனெரிகளை அனுப்பாதது குறித்து அந்த சங்கத்துக்கு கடிதம் எழுதினார்.

மிஷனெரிகளை அனுப்பக் கேட்டு S.P.G மிஷன் சங்கத்துக்கும் கடிதம் எழுதினார். இந்த இரு சங்கங்களிடம் இருந்தும் சாதகமான பதில் வரவில்லை. ஆதலால் C.M.S மிஷன் சங்கத்திடம் பாளையங்கோட்டைக்கு மிஷனெரிகளை அனுப்பும்படி கடிதம் எழுதினார். சென்னையில் இருந்த C.M.S மிஷன் கமிற்றி சென்னையில் மிஷனெரியாகப் பணி செய்த ரேனியஸ் ஐயரவர்களை பாளையங்கோட்டைக்கு ஹாஃப்வ் ஐயரவர்களின் வேண்டுகோளின்படி தொடங்க உள்ள புதிய பணித்தளத்திற்கு தலைமை மிஷனெரியாக அனுப்ப முடிவு செய்தது.

**ரேனியஸ் ஐயரவர்களின் பாளை வருகையும் ஹாஃப்வ் ஐயரவர்களின் உதவியும்**

பாளையங்கோட்டையில் புதிய பணித்தளத்தை C.M.S மிஷன் தொடங்குகையில் 'தாங்கள் S.P.C.K மிஷனுடன் தொடர்பு வைக்காது தனித்து இயங்குவது' என்ற நிபந்தனையை முன் வைத்தனர். அதை கனம். ஹாஃப்வ் ஐயரவர்கள் ஏற்றுக்கொண்டார்.

பாளையங்கோட்டைக்கான பணி மாறுதல் ஆணையை பெற்ற ரேனியஸ் ஐயரவர்கள் குடும்பமாக 07.07.1820 அன்று பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார். அவர் குடும்பமாய் தங்க பாளையங்கோட்டையின் கோட்டைக்குள் வீடு ஒன்றை ஹாஃப்வ் ஏற்பாடு செய்திருந்தார். அதில் ரேனியஸ் குடும்பமாய் தங்கினார். கோட்டைக்குள் குளோரிந்தா அம்மையாரால் தொடங்கப்பட்ட S.P.C.K மிஷன் சபை இருந்தபடியால் கோட்டைக்கு வெளியே ரேனியஸ் தங்கி இருந்து மிஷன் பணிகளை கவனிக்கும்படி C.M.S சென்னை கமிட்டி அறிவுறுத்தியது. ஆனால் கோட்டைக்கு வெளியே வாடகை அதிகமாக இருந்தது, ஏற்ற வீடும் கிடைக்கவில்லை ரேனியஸின் தர்ம சங்கடமான நிலையை உணர்ந்த ஹாஃப்வ் ஐயரவர்கள் திருநெல்வேலிக்கும் பாளையங்கோட்டைக்கும் இடையே வண்ணார்பேட்டையை அடுத்து திருநெல்வேலி திருச்செந்தூர் பெருஞ்சாலையின் தென்புறம் தாம் செமினரி நடத்தி வந்த, தமக்கு சொந்தமாய் இருந்த இரண்டு மிஷன் கட்டிடங்களைக் கொண்ட மிஷன் பங்களாவை குறைந்த விலைக்கு ரேனியஸிற்காக C.M.S மிஷன் சங்கத்திற்கு குறைந்த விலைக்கு விற்க முன்வந்தார்.

அதை ஏற்றுக்கொண்ட ரேனியஸ் C.M.S மிஷன் சங்கத்திற்காக அதை வாங்கி அந்த பங்களாவில் குடியேறினார். மிஷன் கட்டிடங்களில் நடைபெற்று வந்த செமினரியையும் ரேனியசிடம் ஹாஃப்வ் ஒப்படைத்தார்.

**ஹாஃப்வ் ஐயரவர்களின் பணிமாற்றம்**

16.03.1821 இல் ஹாஃப்வ் ஐயரவர்கள் பூந்தமல்லியில் இருந்த ராணுவ பட்டாளத்திற்கு பணி மாறுதல் செய்யப்பட்டார்கள். 1820-1821 க்குட்பட்ட காலகட்டத்தில் ரேனியஸ் ஐயரவர்களோடு இணைந்து ஹாஃப்வ் ஐயரவர்கள் செய்த நற்பணிகள் என்றும் மறக்க இயலாதவை.

ஓராண்டு பூந்தமல்லியில் பணி செய்த நிலையில் சுகவீனமானதால் தனது தாய் நாடான இங்கிலாந்துக்கு 1822 இல் சென்றார்கள். இரண்டு ஆண்டுகள் இங்கிலாந்தில் தங்கி இருந்தார்கள். 1824 இல் சென்னை திரும்பினார்கள். சென்னை செயின்ட். ஜார்ஜ் கோட்டையில் இருந்த ராணுவ பட்டாளத்திற்கு 1824-1826 வரை குருவாகப் பணி.

**பணி ஓய்வும் மரணமும்**

1826 இல் ராணுவ குரு பணியில் இருந்து விருப்ப ஓய்வு பெற்று இங்கிலாந்து சென்றார். அங்கு 1832 - 1847 வரை ஹாம்

என்னுமிடத்தில் பணிசெய்தார். 02.11.1847 இல் ஹாஸ்டிங்ஸில் மரணம் அடைந்தார். ஹாமில் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

### 2. கனம். ஜார்ஜ் பெற்றிட் ஐயரவர்களும் வரலாற்றுப் பணியும்

'The Tinnevelly Mission,' 'The Life of Rev.J.T.Tucker' ஆகிய திருச்சபை வரலாறு மற்றும் மிஷனெரி வரலாறு சார்ந்த இரு வரலாற்று நூல்கள் கனம்.ஜார்ஜ் பெற்றிட் ஐயரவர்களால் எழுதி வெளியிடப்பட்டது.

நெல்லை அப்போஸ்தலர் ரேனியஸ் ஐயரவர்களுக்குப் பின் பாளையங்கோட்டை கதீட்ரல் தூய. திரித்துவ பேராலய குருவாகப் பணி செய்து கனம்.ரேனியஸ் ஐயரவர்களால் கட்டப்பட்ட தேவாலயத்தை அதன் பழமையும் தனித்தன்மையும் மாறாத அளவில் மிகச் சிறப்பாக விரிவுபடுத்தி தற்போது வரை கெம்பீரமாக நிற்கும் 115 அடி உயர ஊசி கோபுரத்தை நேர்த்தியாக கட்டி எழுப்பி சிறப்படையச் செய்தவர் கனம். ஜார்ஜ் பெற்றிட் ஐயரவர்கள். அவர்களது வரலாற்றையும் மிஷன் பணிகளையும் காண்போம்.

### தோற்றமும் ஊழிய அர்ப்பணிப்பும்

1808 இல் பெற்றிட் ஐயரவர்கள் இங்கிலாந்தில் உள்ள பர்மிங்காமில் பிறந்தார். குருத்துவ கல்வியை நிறைவு செய்த பெற்றிட் 1831 இல் உதவி குரு அருட்பொழிவைப் பெற்றார். 1832 இல் லண்டனில் குருவானவர் அருட்பொழிவைப் பெற்றார். அயல்நாட்டு மிஷனெரிப் பணிக்கென தம்மை அர்ப்பணித்த பெற்றிட் C.M.S மிஷன் சங்கத்துக்கு மிஷனெரியாக செல்ல விண்ணப்பித்தார். 1833 இல் C.M.S மிஷனெரியாக சென்னை வந்தடைந்தார்.

### ரேனியஸின் பணி நீக்கமும் பெற்றிட்டின் பணி நியமனமும்

1820 முதல் பாளையங்கோட்டை C.M.S தலைமை மிஷனெரியாக ரேனியஸ் ஐயரவர்கள் சிறப்பாக பணியாற்றிய போதும் ரேனியஸிற்கும் C.M.S சென்னை கமிற்றிக்கும் இடையே சில காரியங்களில் கருத்து வேறுபாடு இருந்து வந்தது.

கனம்.ஹார்ப்பர் ஐயரவர்கள் ஆங்கிலிகன் சபை நடைமுறை சிக்கல்களை வெளிப்படுத்தும் தமது நூலொன்றுக்கு ரேனியஸிடம் மதிப்புரையை எழுதிக்கேட்டார். மதிப்புரையை எழுதியனுப்பிய ரேனியஸ் C.M.S மிஷன் கமிற்றியாரிடமிருந்து தமக்கு அதனால் சிக்கல் வரலாம் என்பதை உணர்ந்து அதைப் பிரசுரிக்க வேண்டாம் என ஹார்ப்பரிடம் கேட்டிருந்தார். அதை ஏற்காது ரேனியஸின் மதிப்புரையுடன் ஹார்ப்பர் நூலைப் பிரசுரித்தார். இதை ரேனியஸின் ஊழியத்தில் பொறாமை கொண்டோர் மிகச் சரியாக பயன்படுத்தி சி .எம் .எஸ். மிஷன் ரேனியசை பணி நீக்கம் செய்யும்படியான சூழ்நிலையை உருவாக்கினர். ரேனியஸின் பணி நீக்கத்தை தொடர்ந்து சென்னை சி. எம். எஸ். கமிற்றியார் பெற்றிட் ஐயரவர்களை பாளை தலைமை மிஷனெரியாக 1835 இல் அனுப்பினர்.

### மிஷன் சுற்றுப் பயணங்களில் பெற்றிட்

1835 இல் பாளையங்கோட்டைக்கு வந்தது முதல் மிஷன் சுற்றுப் பயணம் மேற்கொண்டு சபைகளைக் கண்காணித்து வந்தார். சுற்றுப்பயணத்தின் போது அவருக்கு ஜான் தேவசகாயம், ஜான் தாமஸ் ஆகியோர் உறுதுணையாக இருந்தனர்.

### பாளையங்கோட்டை தூய. திருத்துவ பேராலயத்தில் பெற்றிட்

பெற்றிட் ஐயரவர்கள் பாளையங்கோட்டை கதீட்ரல் தூய திரித்துவ பேராலயத்தில் குருவானவராகப் பொறுப்பேற்ற மறு ஆண்டே சென்னை பேராயர் மகாகனம்.டேனியல் காரி அவர்கள் குரு அருட்பொழிவு ஆராதனைக்காக வருகை தந்தார்கள். தேவாலய பெயர் குறித்து கேட்ட போது பெயர் வைக்கப்படவில்லை என பெற்றிட் கூற அதைக் கேட்ட அவர் சிரித்தவாறு தூய. திரித்துவ ஆலயம் என்ற பெயரை கொடுத்தார்.

ரேனியஸ் ஐயரவர்களால் 40 × 17 அடி நீள அகலத்தில் கட்டப்பட்டிருந்த தேவாலயம் வளர்ந்து வந்த பாளையங்கோட்டை சபைக்கு போதுமானதாக இல்லாததால் தேவாலயத்தை பெரிய அளவில் விரிவாக்கம் செய்ய பெற்றிட் திட்டமிட்டார்.

மேற்குப் பகுதியில் தேவாலயம் பின்புறமாக விரிவாக்கம் செய்யப்பட்டது. விரிவாக்கம் செய்யப்பட்ட இடத்தில் ஆல்டர் மற்றும் பாடகர் குழு அமரும் இடம் ஆகியவை அமைந்தது. தேவாலயத்தின் தென் வடல் பகுதியை அகலமாக்க தாழ்வாரங்கள் அமைக்கும் பொருட்டு தென் வடல் சுவர்களில் திறப்புகள் உருவாக்கப்பட்டது. அந்த இடங்களில் உயரமான தூண்கள் எழுப்பப்பட்டன மேற்கு பகுதியில் வளைவுகள் அமைக்கப்பட்டன. தேவாலய மேற்கூரை முழுவதும் சிறப்பாக பழுது பார்க்கப்பட்டது.

### தேவாலய ஊசிக்கோபுரம் கட்டப்படுதல்

தேவாலயத்தை பெரிய அளவில் விரிவாக்கம் செய்த பெற்றிட் ஐயரவர்கள் தேவாலயத்தின் முன் பகுதியில் ஊசிக்கோபுரம் எழுப்பத் திட்டமிட்டு கோபுரப் பணியைத் தொடங்கினார். பெற்றிட்டின் நேரடி மேற்பார்வையில் கோபுரக் கட்டுமானப் பணி நடைபெற்றது. மூன்று தட்டுகள், அதன் மேல் Steeple Tower எனும் ஊசிக்கோபுரம், ஊசி கோபுரத்தின் உச்சியில் ஆறு அடி சுற்றளவு கொண்ட இரும்பு உருண்டை பொருத்துவது என்ற திட்டமிடலில் அனைத்து கட்டுமானப் பணிகளும் மிக நேர்த்தியாக நடைபெற்றது. இரும்பு உருண்டையை நேர்த்தியாக பொருத்த வேண்டும் என எண்ணிய பெற்றிட் 11.04.1845 அன்று. மாலையில் தாமே கோபுர உச்சிக்கு சென்று அதில் இரும்பு உருண்டையைப் பொருத்தினார். அன்று முதல் இன்றுவரை 177 ஆண்டைக் கடந்த நிலையில் அதே அமைப்புடன் தேவாலய ஊசிக்கோபுரம் ஆண்டவருக்கு மகிமையாக இருந்து வருகிறது.

### விடுப்பும், இலங்கை ஊழியமும்

1847 வரை 12 ஆண்டுகள் பாளையங்கோட்டை C.M.S தலைமை மிஷனெரியாக பெற்றிட் சிறப்புடன் பணி செய்தார். 1847 இல் விடுப்பு எடுத்து இங்கிலாந்துக்கு திரும்பிச் சென்றார். இரு ஆண்டுகள் விடுப்பில் இருந்த பின் மிஷனெரியாக 1850 இல் இலங்கை சென்றார். அங்கு ஐந்து ஆண்டுகள் சிறப்பாக ஊழியம் செய்தார்.

### விருப்ப ஓய்வும் அதற்கு பின்பான ஊழியங்களும்

1855 இல் C.M.S மிஷன் பொறுப்புகளில் இருந்து விருப்ப ஓய்வு பெற்றுக் கொண்டு பெற்றிட் இங்கிலாந்துக்கு திரும்பினார். 1855-1856 ஓராண்டு பர்மிங்காம் பொது மருத்துவமனையில் பணி செய்தார். 1856 முதல் 1872 வரை பர்மிங்காம் தூய.யூதா தேவாலயத்தில் குருவாக பணி செய்தார். அங்கிருந்து 1872 இல் விருப்ப ஓய்வு பெற்று ஓய்வில் இருந்த போது 19.01.1873 இல் ஹெர்போர்டில் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்.

## பாளையங்கோட்டை முருகன்குறிச்சியிலுள்ள

# 'அடைக்கலாபுரம்'

## நினைவாக பெயரிடப்பட்ட சேலம் அஸ்தம்பட்டி

# 'அடைக்கல நகர்'




சேலம்
ஜே.பர்னபாஸ்

### சேலம் நோக்கி நம்பிக்கையுடன் ஒரு குடிபெயர்வு

கி.பி.1840 ஆம் ஆண்டு அன்றைய சேலம் நகரில் இந்தியாவிலேயே முதன்முறையாக தொழிற்கல்வியைப் போதிக்கும் தொழிற்பயிற்சிப் பயிலகத்தை (School of Industry) சேலம் கோட்டைப் பகுதிக்கும், சேலம் செவ்வாய்ப்பேட்டைப் பகுதிக்கும் இடையில் 30 ஏக்கர் பரப்பளவில் அமைந்திருந்த சேலம் மிஷன் வளாகத்தில் சங்கை J.M.லெக்லர் ஐயர் அன்று துவக்கினார். இப்படி புது முயற்சியாக துவக்கப்பட்ட இந்த தொழிற்பயிற்சி பயிலகத்தில் பணிசெய்வதற்காக திறமையான தொழிலாளர்களை தான் முன்பு பணிசெய்து வந்த திருநெல்வேலி சீமையிலிருந்து வரவழைக்க திட்டமிட்டு, அதன்படி காலஞ்சென்ற சங்கை C.T.E.ரேனியஸ் ஐயரிடம் (1790-1838) கல்வியும், தொழிற்பயிற்சியும் பெற்ற சுவிசேஷபுரம் கனம் E. தாவீது உபதேசியார் தலைமையில் நல்ல தொழிற்பயிற்சி பெற்ற தொழிலாளர்களை சேலத்திற்கு தன்னிடம் அனுப்பி வைக்க சங்கை ரேனியஸ் ஐயருக்கு பின்பு அங்கே மிஷன் பொறுப்பை ஏற்று நடத்தி வந்த மிஷனெரியிடமும், சங்கை ரேனியஸ் ஐயரிடம் விசுவாசமாக பணிசெய்து வந்த தனக்கு நன்கு பழக்கமான அவரது செயலாளரிடமும் கடிதங்களை கொடுத்தனுப்பினார்.

அதன்படி கனம் தாவீது உபதேசியாரது தலைமையில் நன்கு பயிற்சி பெற்ற கைதேர்ந்த தொழிலாளர்கள் தங்கள் குடும்பத்தினருடன் சேலம் நோக்கி புறப்பட்டனர். இப்படியாக பாளையங்கோட்டை சுற்றுவட்டார பகுதிகளில் இருந்தும், குறிப்பாக அடைக்கலாபுரத்தைச் சேர்ந்தவர்களுமாக புறப்பட்ட 30 குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் கனம் தாவீது உபதேசியார் தலைமையில் மாட்டு வண்டிகளில் பயணப்பட்டு சேலமாகிய தங்கள் எதிர்காலத்திற்காக புதியதாக மிஷனெரிமார்களால் வாக்களிக்கப்பட்ட புண்ணிய பூமிக்கு (Salem -the Promised Land) வந்து சேர்ந்தனர். இப்படி வந்தடைந்த அனைவரையும் சேலம் மிஷன் வளாகத்தில் சங்கை J.M. லெக்லர் ஐயர் வரவேற்று தங்க வைத்து, அவர்களை சேலம் தொழிற்பயிற்சி பயிலகத்தில் பணிசெய்து வரவும் ஏற்பாடுகள் செய்து தந்தார். இந்த தொழிற்பயிற்சி பயிலகத்தில் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த பாளையங்கோட்டை தொழிலாளர்களே பயிற்சியாளர்களாக நிர்வாகிகளாக இருந்தனர். இவர்களால் சேலம் தொழிற்பயிற்சி பயிலகம் நன்கு அபிவிருத்தி ஆனது.

### திருநெல்வேலி தொழிலாளர்களின் சிறப்பான பணிகளும் நற்செய்தி ஊழியங்களும் :

இந்த திருநெல்வேலித் தொழிலாளர்களால் நடத்தப்பட்ட தொழிற்பயிற்சி பயிலக கட்டிட வேலைப் பிரிவு (Masonry Works Section) ஆசிரியர்கள் மற்றும் மாணவர்களால் 1849 ஆம் ஆண்டு கட்டப்பட்டதே சேலம் மிஷன் வளாகத்தில் உள்ள பள்ளிக்கூட வகுப்பறைகளும், சேலம் மிஷன் இல்லமும் (Salem Mission House) ஆகும். அதற்கு முன்பு இருந்த பழுதடைந்த கட்டிடங்களை அகற்றிவிட்டு பலமான புதிய கட்டிடங்களை சங்கை J.M.லெக்லர் ஐயர் தமது தொழிற்பயிற்சி பயிலத்தின் மூலமாக கட்டுவித்தார்.

சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் கட்டிய சேலத்தின் முதல் சீர்திருத்த கிறிஸ்தவ ஆலயம் (Rev.H.Crisp's Chapel -1831) வளர்ந்து பெருகும் சேலம் மிஷன் திருச்சபைக்கு போதுமானதாக இல்லை. எனவே ஒரு பெரிய புதிய ஆலயத்தைக் கட்ட சங்கை J.M.லெக்லர் ஐயர் முடிவெடுத்து அதற்கான அஸ்திபாரத்தை 20-2-1852 ல் போட்டு பணிகளைத் தொடங்கினார். இந்த ஆலய கட்டுமானப் பணிகளில் சேலம் தொழிற்பயிற்சி பயிலகம் முழுமையாக ஈடுபடுத்தப்பட்டது. பயிலகத்தின் ஆசிரியர்களும், மாணவர்களும், மற்றும் திருச்சபை விசுவாசிகளும் இணைந்தே இந்த ஆலய கட்டுமானப் பணிகளைச் செய்ய சங்கை லெக்லர் ஐயர் கட்டளை கொடுத்திருந்தார். ஆலய கட்டுமானத்திற்கான அனைத்துமே இந்திய பொருட்களைக் கொண்டு, இந்திய கரங்களால் செய்யப்பட்டது. இப்படி கட்டப்பட்ட சுதேசி தேவாலயம் அன்று உலகத்திற்கொரு புதுமை; ஆலயத்திற்கான கண்ணாடிகள் மட்டும் இங்கிலாந்திலிருந்து வரவழைக்கப்பட்டது. இந்த ஆலயம் 1853 ஆம் ஆண்டு திறக்கப்பட்டது (14-12-1853). இதன் பணிகள் முழுவதுமாக முடிவடைந்தது. 1856 ல் அது குறித்த கல்வெட்டு ஆலயத்தின் முகப்பில் இன்றும் காணலாம். இந்த ஆலயம் இன்று சேலம் கோட்டை C.S.I லெக்லர் நினைவாலயம் என்று அழைக்கப்படுகிறது.

கி.பி.1856 ஆம் ஆண்டு சேலம் -ஈரோடு இருப்புப் பாதை ஆய்வுப் பணிகள் மெட்ராஸ் இரயில்வே கம்பெனியால் துவங்கப்பட்டபோது, இருப்புப் பாதை ஆய்வுப் பணி மற்றும் இருப்புப்பாதை பதிப்புப் பணிசெய்யும் பகுதிகளிலெல்லாம்

கிறிஸ்தவ நற்செய்திப் பணிகளையும் சேர்த்துச் செய்ய திறமையான கிறிஸ்தவத் தொழிலாளர்களை தன்னிடம் அனுப்ப வேண்டுமென சங்கை லெக்லர் ஐயரிடம் மெட்ராஸ் இரயில்வே கம்பெனியின் பொறியாளர் திரு.ஜான் பர்டாக் (Er.John Braddock) கேட்டுக் கொண்டார்.

அதன்படி கனம் தாவீது உபதேசியார் தலைமையில் திருநெல்வேலி கிறிஸ்தவ தொழிலாளர்கள் அனைவரும் இருப்புப்பாதைப் பணிகளுக்காக சங்ககிரிக்கு அனுப்பப்பட்டனர்.

**சங்ககிரி மாவலிப்பாளையம்:**

1857 ல் சங்ககிரி மாவலிப்பாளையத்தில் பணிமனை ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இந்தப் பணிமனையில் பணிசெய்ய அதிகமான தொழிலாளர்கள் தேவைப்பட்டனர். இதனை அறிந்த சேலம் தொழிற்பயிற்சி பயிலகத்தைச் சேர்ந்த சில ஆசிரியர்களும், மாணவர்களும், சங்கை லெக்லர் ஐயரிடம் அனுமதி பெறாமல் சங்ககிரி சென்று இரயில்வே பணிகளில் சேர்ந்து கொண்டனர். இதனால் கோபமடைந்த சங்கை லெக்லர் ஐயர் கனம் தாவீது உபதேசியார் மீது சந்தேகம் அடைந்து, அவரை இரயில்வே பணிகளிலிருந்து நீக்கிவிடும்படி இரயில்வே பொறியாளர் ஜான் பர்டாக் அவர்களுக்கு கடிதம் அனுப்பினார். இதற்கு உடன்படாத நிலையிலும், வேறுவழியின்றி கனம் தாவீது உபதேசியாரை இரயில்வே பணிகளிலிருந்து நீக்கம் செய்தார் பொறியாளர் ஜான் பர்டாக்.

திருநெல்வேலி தொழிலாளர்களின் ஆதரவிலும், தனது ஊழியத்தினாலும், தன்னை காப்பாற்றிக் கொண்ட கனம் தாவீது உபதேசியார் தொடர்ந்து அங்கேயே தங்கி பணிமனை அருகே கட்டப்பட்ட ஜெப ஆலயத்தில் தனது உதவியாளர் திரு.தேவசகாயம் அவர்களுடன் ஞாயிறு அன்று ஆலய ஆராதனைகளுடனும், மற்ற வார நாட்களில் தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு கல்விபோதிப்பது என்றும் பணிசெய்து வந்தார்.

**'அடைக்கல நகர்' என்ற கிறிஸ்தவ கிராமம் உருவானது:**

கி.பி.1861ஆம் ஆண்டு இரயில்வே பணிகள் அனைத்தும் முடிவடைந்த நிலையில் திருநெல்வேலி தொழிலாளர்கள் அனைவரும் சேலம் திரும்பி, சேலம் மிஷன் வளாகத்தில் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்டு சேலத்தில் இருக்கும்போது தாங்கள் வாழ்ந்து வந்த அந்த குடியிருப்புகளுக்கு வந்தபோது அங்கேதானே அவர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளப்படாமல் திருப்பி அனுப்பப்பட்டனர்.

சங்ககிரி மாவலிப்பாளையத்தில் இவர்கள் இருந்தபோது இவர்கள் ஒரு தனி சபையாக செயல்பட்டு வந்ததையும், சேலம் மிஷனிலிருந்து நீக்கப்பட்ட கனம் தாவீது உபதேசியார் தலைமையில் செயல்பட்டு வந்ததையும், அவரை தங்கள் நன்கொடைகள் மூலமாக தாங்கிவந்ததையும், மேலும் இவர்களை பிளைமவுத் சகோதரர்கள் (Plymouth Brothers) கூட்டத்தார் என்றும் கூறப்பட்டதாலும், இவைகளை காரணம் காட்டி அனுமதி மறுக்கப்பட்டனர்.

இந்த நிலையில் இவர்கள் அனைவரையும் சுகமாக சேலத்தில் தங்கவைக்க இவர்களுக்கென ஒரு குடியிருப்பு இடத்தை சேலம் நகர பகுதியில் வாங்கி அங்கே இவர்களை குடியமர்த்த கனம் தாவீது உபதேசியார் தீர்மானித்து, தனது ஐரோப்பிய மற்றும் இந்திய நண்பர்களான திரு.எபிஞ்ஞர் (Mr. Eppinger), திரு.ஜான் பர்டாக் (Mr.John Braddock), திரு.கார்ல் இராம் (Mr.Carl Rahm), திரு.ஜான் டேவிட் (Mr.John David), திரு.E.ஜோயாக்கீம் (Mr.E.Joacuqim), மற்றும் திரு.J.மாணிக்கம் பிள்ளை (Mr.J.Manickum pillay) ஆகியோரிடம் உதவிகளைக் கோரி அவர்கள் தந்த நன்கொடைகளாலும், தான் திருநெல்வேலி சீமை பாளையங்கோட்டையில் தனக்குச் சொந்தமான அடைக்கலாபுரத்தின் நிலத்தை சங்கை ரேனியஸ் ஐயருக்கு விற்ற பணத்தையும் கொண்டும், அன்றைய சேலம் அஸ்தம்பட்டி கிராமத்தின் மேற்கே 2 ஏக்கர் 59 செண்டும் கொண்ட இடத்தை வாங்கினார். (இது ஐரோப்பிய அதிகாரிகள் தங்குவதற்காக ஒதுக்கப்பட்ட இடம் என்று பேராசிரியர் J.ஹேன்ஸ் ராஜ் குறிப்பிடுகிறார். அதுதான் அந்த அடைக்கல நகர் பலகையில் குறிப்பிடப்பட்டிருக்கும் '1847' என்ற வருட பொறிப்பு என்று தோன்றுகிறது.) மேலும் இது பற்றி ' A Hundred Years of Salem Mission History 'என்ற நூலை எழுதிய சங்கை T.C.விட்னி ஐயர் குறிப்பிடும்போது இப்படி சொல்கிறார்.

(' David,who was a man of character, with the help of Rahm and Eppinger, who in this matter apparently did not see eye to eye with Lechler, purchased or acquired a piece of land in Hasthampatty)

இப்படியாக இந்த நிலத்தை வாங்கிய கனம் தாவீது உபதேசியாரின் பெயரில் பட்டாவும் பெறப்பட்டது. தானும்





தன்னுடன் திருநெல்வேலி சீமையிலிருந்து ஊழியப் பாதையில் சேலம் வந்து, சேலம் மிஷனிலிருந்து அநியாயமாக திருப்பி அனுப்பப்பட்ட தொழிலாளர்களோடு, இந்த புதிய குடியிருப்பில் தன்னை நாடி வந்த வீடற்ற ஏழை கிறிஸ்தவர்களுக்கும் இங்கு வீடுகட்டிக்கொண்டு குடியிருக்க அனுமதி அளித்தார் கனம் தாவீது உபதேசியார். இப்படி இங்கு அடைக்கலம் பெற்ற இவர்களிடம் தாங்கள் வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்திருக்கும் நிலத்திற்கான வாடகை வாங்கப்படவில்லை. இவர்கள் அனைவருக்கான கிஸ்தி / நிலவரியையும் கனம் தாவீது உபதேசியாரின் நண்பர்களே கட்டினார்கள் என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

('David invited the erring workmen ,probably others who had left the mission for various reasons, to live there in what he called the 'Adeikala nagaram' or City of Refuge.'- p.no.23, of Rev.T.C.Witney's A Hundred Years of Salem Mission History. )

இப்படியாக இந்த இடத்தில் தஞ்சமடைந்த கிறிஸ்தவ தொழிலாளர்கள் இங்கே இந்த இடத்தில் தங்களுக்கென வீடுகளைக் கட்டிக்கொண்டு, அவர்கள் ஆராதனை செய்வதற்காக நிலப்பகுதியின் வடகிழக்கே தென்வடலாக ஒரு மண்குடிசை தேவாலயத்தையும் கட்டினார்கள். ('A small chapel of mud and thatch was built in this place '- Rev.T.C.Witney p.no.23)

சேலம் அஸ்தம்பட்டியில் தாங்கள் புதியதாக உருவாக்கிய இந்த கிறிஸ்தவ கிராமத்திற்கு பாளையங்கோட்டை முருகன்குறிச்சியில் சங்கை ரேனியஸ் ஐயர் அடக்கஸ்தலம் இருக்கும் அடைக்கலாபுரத்தின் நினைவாக 'அடைக்கல நகர் 'என்று பெயரிட்டார்கள். அதுவே இன்றுவரை இந்த சிறிய கிறிஸ்தவ கிராமத்தின் பெயராகத் தொடர்கிறது.

கடந்த 5-11-2022 அன்று சங்கை ரேனியஸ் ஐயரின் 233 ஆவது பிறந்த நாள் இங்கே அடைக்கல நகரில் கொண்டாடப்பட்டது. அந்த நாளே அடைக்கல நகர் தினமாகவும் கொண்டாடப்பட்டது.

அடைக்கல நகர் உருவாகிய 162 ஆவது ஆண்டு தினத்தை அன்று நண்பர்களாக கொண்டாடி மகிழ்ந்தோம்.




christianhistorical@gmail.com

ஆசிரியர்
கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401, 91767 80001

சுஜித் ரெக்ஸ்
வடிவமைப்பு

மன்னா செல்வகுமார்
ஆசிரியர்




# திருநெல்வேலி அத்யட்சாதீன
# புத்தகசாலை ஆரம்ப வரலாறு

பேரா.பி.குட்டி ஜாஸ்கர்,
போப் கல்லூரி, சாயர்புரம்.

அத்யட்சாதீன புத்தகசாலை 1882 ஆம் ஆண்டு சர்ச் மிஷன் சங்கத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டது. 1911 ஆம் ஆண்டு வரையிலும் சென்னை வேதாகம, கிறிஸ்தவ கல்வி அபிவிருத்தி முதலிய சங்கங்களுக்கு கிளை டிப்போவாகவும் சேர்த்து நடத்தப்பட்டது. 1912 ஆம் ஆண்டு முதல் கனம் ஸ்காட் பிரைஸ் ஐயரவர்களால் புக் டிப்போவுக்கு வேண்டிய சகலவிதமான புஸ்தகங்களும் சில பொருட்களும் இப்புத்தக சாலைக்கு வரவழைக்கப்பட்டு சகல மிசின் ஸ்தாபனங்களும் இவ்விடத்திலேயே வாங்கும் படியாகவும் அவர்களால் கேட்டுக்கொள்ளப்பட்டது. இப்புத்தகசாலை துவக்கத்தில் சி.எம்.எஸ். அச்சு கூட கட்டிடத்தோடு சேர்த்து வைக்கப்பட்டிருந்தது. 1914 ஆம் ஆண்டு அச்சுக்கூடம் விற்கப்பட்டு மேற்படி கட்டிடம் நார்மல் ஸ்கூலுக்காக கையளிக்கப்பட்டபின் இப் புதுக் கட்டிடத்தோடு சேர்ந்திருந்த பெரிய ஹால் ரூ 3000/-க்கு கனம் ஸ்காட்பிரைஸ் ஐயரவர்களால் கட்டப்பட்டு கொண்டு வரப்பட்டது. 1934 ஆம் வருடத்தில் கனம் கார் ஐயரவர்களிடமிருந்து காலி நிலமும், தோட்டமும் ரூ 300/- க்கு கிரயத்திற்கு வாங்கப்பட்டது. 1936 ஆம் வருடத்தில் இப்புதிய கட்டிடமும் ரூ 3000/-க்கு கனம் ஏவான்ஸ் ஐயரவர்களால் கட்டி முடிக்கப்பட்டது.

இப்புத்தக சாலையின் புதுக் கட்டிடத் திறப்புவிழா 03.09.1936 ஆம் வருடம் வெகு சிறப்பாக நடைபெற்றது. அநேக கனவான்கள் வந்து சிறப்பித்திருந்தார்கள். கனம் பென்னற் ஐயரவர்களால் இப்புது கட்டிடம் திறந்து வைக்கப்பட்டது. அத்தியட்சரின் பிரதிநிதியும், அத்யட்சாதீன பொக்கிசத்தாரும், புத்தகசாலையின் சூப்பிரின்டெண்டென்றுமாகிய கனம் எவன்ஸ் ஐயரவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

பின்பு பந்தலில் நடைபெற்ற திறப்பு விழா கூட்டத்தில் கனம் பென்னட் ஐயரவர்கள் தலைமை தாங்க கனம் D.S.டேவிட் ஐயரவர்களும், திரு.J.அன்புடையான் அவர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள். திரு.G.S.செல்லையா அவர்களால் ரிப்போர்ட் வாசிக்கப்பட்டது. ரிப்போர்ட்டில் இப்புத்தகசாலையில் சூப்பரின்டென்ட்டாக இருந்து வந்த கனம் ஸ்காட்பிரைஸ், கனம் மூர், கனம் செல்வின் ஐயரவர்களால் புத்தகசாலையின் முன்னேற்றத்திற்காக காலாகாலங்களில் செய்யப்பட்ட அநேக முக்கியமான நடவடிக்கைகளைப் பற்றியும், அப்போது சூப்பிரின்டெண்டென்றாக இருந்த கனம் எவன்ஸ் ஐயரவர்களாலும் செய்யப்பட்டிருக்கிற முக்கியமான சீர்திருத்தங்களைப் பற்றியும், 1911 ஆம் வருடமுதல் 1927 ஆம் வருடம் முடிய இப்புத்தகசாலையில் மானேஜராக வேலை பார்த்து வந்த திரு.S.V.நேசமணி அவர்களும் இதன் முன்னேற்றத்திற்கு முக்கிய கருவியாக விளங்கினார் என்பதை பற்றியும், அவர் காலம் சென்ற பின் 1913 ஆம் ஆண்டு முதல் அசிஸ்டென்றாக வேலை பார்த்த திரு.G.S.செல்லையா அவர்கள் இந்த புத்தகசாலைக்கு மானேஜராக நியமிக்கபட்ட பின் ஏற்பட்டிருக்கிற முன்னேற்றத்தையும் கனம் எவன்ஸ் ஐயரவர்கள் இப்புது கட்டிட நிலத்திற்கு சொந்தக்காரரான கனம் கார் ஐயரவர்களிடமிருந்து காலி நிலத்தை வாங்கி நூதன முறையில் கீழ் அறையைக் கட்டி முடிப்பதற்காக அவர்கள் எடுத்துக்கொண்ட பிரயாசங்களை பற்றியும் விஸ்தாரமாக கூறினார்கள்.

1927 ஆம் வருடம் முதல் இதன் வருமானத்திலிருந்து வருடம் ஒன்றுக்கு ரூ 1500/- அத்யட்சாதீன மத்திய பண்டிர்க்கு செலுத்தவேண்டுமென்று பைனான்ஸ் கமிட்டியினரால் தீர்மானிக்கப்பட்டது. 1933 ஆம் ஆண்டு முதல் அத்யட்சாதீன புத்தகசாலையென்று அழைக்கப்பட வேண்டுமென்றும், அத்யட்சாதீனத்தின் சகல ஸ்தாபனங்களும் இப்புத்தகசாலையையே ஆதரிக்க வேண்டும் என்றும் 16.12.1932 இல் கூடிய அத்யட்சாதீன நிர்வாக கமிட்டியினரால் தீர்மானிக்கப்பட்டது. தேவரீருக்கே தோத்திரம் உண்டாவதாக.

அத்தியஷாதீனப் புத்தக சாலை, பாளையங்கோட்டை,
தொகுப்பு : நற்போதகம் நவம்பர் 1936

தமிழ் நாட்டின்
தனிப்பெரும் நாவலாசிரியர்

அ.மாதவையா
அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்



## தொடர்– 21

கல்யாணமில்லாமல் அவனோடு வாழ்வது என்ற எண்ணம் அவள் மனதில் படவே இல்லை. அவன் அவளைத் துணிந்து மணந்துகொள்வானா அல்லது தன் மனசுக்குப் பிடித்தமான வேறு எவளையாவது தேடுவானா? அவள் அழகு இன்னும் குறைந்துவிடவில்லை என்பது நிச்சயம். உள்ளத்தில் புதியதொரு அறிவுக்களையும் பரந்த மனப்பாங்கும் உண்டாகி இருந்ததால், அவள் முகம் இன்னும் அதீத அழகுடன் இருந்தது என்பதை அவள் உணர்ந்தாள். ஆனால் அவளுடைய விகாரப்பட்ட உடல்? மேலும் இரும்பாலான சமுதாயச் சட்டத்தை அவனால் தகர்க்க முடியுமா? அவனைப் பார்த்துப் பேசி, ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று விரும்பினாள்.

ஒருநாள் மாலை மாதவராவ் பங்களாவுக்கு வந்து அவளுடன் பேச விரும்புவதாகச் சொல்லி அனுப்பியபோது அவள் மிகுந்த மகிழ்ச்சியும் பரபரப்பும் அடைந்தாள். ஆனால் அவன் தனது முக்கிய எதிரியின் மகனாக இருந்ததால் அவனுடன் பேசுவதற்குமுன் லிட்டில்டனின் அனுமதியைப் பெறுவது நலம் என்று கருதினாள். அவள் இதற்கு முன்னால் அவரிடம் மாதவனைப் பற்றியோ தங்கள் பரஸ்பர உணர்ச்சி களைப்பற்றியோ சொல்லியதில்லை. முதலில் ஏதாவது ஆபத்தில் மாட்டிக்கொண்டு விடக்கூடாதே என்று பயந்து அவளை மாதவனோடு பேசுவதற்கு ஒப்புதல் அளிக்கத் தயங்கினார் லிட்டில்டன். ஆனால் மகன் அப்பாவிடமிருந்து முற்றிலும் வேறுபட்ட இயல்புடையவன், அவனைப்பற்றிப் பயப்படத் தேவையில்லை என்று உறுதியுடன் கிளாவிருந்தா சொன்னதால், அவள் உசிதம்போல் நடப்பதற்கு அவளுக்குச் சுதந்திரம் உண்டு என்று எண்ணி சம்மதித்துவிட்டார். ஆனால் அன்று அவர் வெளியே செல்லவில்லை. தமது அறையில் முன்னெச்சரிக்கையாக உட்கார்ந்திருந்தார்.

மாதவராவைக் கண்டதும், அவள் நெஞ்சு 'படக் படக்' என்று அடித்துக்கொண்டது. அவனும் கூச்சத்துடன் எப்படித் தொடங்குவது என்று தெரியாமல் அவள் அழகிய முகத்தை முறைத்துப் பார்த்துவிட்டுப் பின் வெட்கத்துடன் மறுபுறம் நோக்கினான். அவள் அவனை உட்காரச் சொல்லி, அவன் மனைவியின் மரணத்தைப்பற்றி விசாரித்தாள்.

'உனக்கு யார் அதைப்பற்றிச் சொன்னார்கள்?' என்று கவலையே தொனிக்காத குரலில் கேட்டான்.

இவனைப்பற்றி சாரதா கொண்ட அபிப்பிராயம்தான் சரியானதோ என்றுகூட அவளுக்குத் தோன்றிற்று. 'அது' நடந்த அன்றே சாரதா வந்து சொன்னாள், கேள்விப்பட்டதும் நான் மிகவும் வருத்தப்பட்டேன். பெற்றோருக்கு அவள் ஒரே மகள் அல்லவா? எவ்வளவு ஆசை வைத்திருந்தார்கள், அவள்மீது?' என்றாள்.

'ஆமாம், அது உண்மைதான்' என்றான் அவன். அந்த நிகழ்ச்சியை இந்தக் கோணத்திலிருந்து இதுவரை பார்த்திராதவன்போல.

'பட்டுக்கோட்டையிலிருந்து எப்போது வந்தாய்?'

'அப்பாவை அரண்மனை வேலையிலிருந்து நீக்கியதாகக் கேள்விப்பட்டதும் வந்தேன். பலவிதமான வதந்திகள் வந்தன. உன்னைப்பற்றித்தான் மிகவும் கவலை ஏற்பட்டது' என்றான் வெட்கத்துடன். பின் தொடர்ந்து, 'நடந்தவைகளுக்காக நான் மிகவும் வருந்துகிறேன். கமலாபாய் வைத்த பொறியில் விழாமல் நீ தப்பிவிட்டது எனக்கு மிகுந்த மகிழ்ச்சிதான். கமலாபாய் சொல்லியதை அப்பா அப்படியே நம்பி விட்டாராம். நீ சதியாக விரும்பினாய் என்றுதான் கடைசி வரைக்கும் நினைத்துக்கொண்டிருந்தாராம். உன்னிடமும் சொல்லச் சொன்னார். திரும்பத் திரும்ப பலமுறை சொன்னார்' என்றான்.

அவள் குறுக்கிட்டு, 'அப்படியானால், நீ இங்கு வருவது அவருக்குத் தெரியுமா?' என்று கேட்டாள்.

இந்தக் கேள்வி மாதவனைத் தூக்கிவாரிப்போட்டது.

சிறிது நேரம் தயங்கியபின், ஆமாம், தெரியும்' என்று ஒப்புக்கொண்டான்.

'இதைச் சொல்லுவதற்கென்றே அவர் உன்னை என்னிடம் அனுப்பினாரா?'

'இல்லை, அவர் என்னை அனுப்பவில்லை. நானாகத்தான் உன்னைப் பார்க்க விரும்பினேன். அதை அறிந்ததும் அவர் அவ்வாறு சொல்லி அனுப்பினார்.'

'ஆனால், அவருக்கு நீ இங்கு வருவது எப்படித் தெரியும்? நீ இங்கு வருவதைப்பற்றி வேறு யாரிடமும் சொன்னாயா?'

இந்தக் குறுக்கு விசாரணையால் மாதவன் மனம் குழம்பி விட்டான். என்ன பேசுவதென்று தெரியாமல் பேச்சை மாற்ற முயன்றான்.

'அவருக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. அது போகட்டும். நீ இந்த ஆங்கிலேயனோடு வாழ்ந்துகொண்டிருப்பது உண்மை தானா?'

இந்தக் கேள்வியைக் கேட்டதின் பொருளை உடனே புரிந்து கொள்ளாத அளவுக்குப் பேதையாக இருந்த அவள், 'ஒரே வீட்டில் இல்லை, சாரதாவும் நானும் இந்த வீட்டில் இருந்து வருகிறோம். அவர் அந்த பங்களாவில் இருக்கிறார். அவருடைய மேஜையில் நான் சாப்பிடுவது இல்லை' என்றாள்.

அவளுடைய பேதைமையால் ஊக்கமுற்ற அவன், 'நான் அதைச் சொல்லவில்லை. அவருடைய பாதுகாப்பில் அவருடைய ஆசைநாயகியாக இருந்துவருகிறாயா என்று கேட்கிறேன்' என்றான். ஆனால், சொன்ன மறு வினாடியே அவன் தன் தவறைப் புரிந்துகொண்டு தாங்க இயலாத வெட்கமும் குழப்பமும் அடைந்தான்.

ஆனால், கொட்டிய சொற்களை அள்ள முடியுமா? கிளாவிருந்தாவின் முகம் குப்பென்று சிவந்தது. அவமானத்தாலும் கோபத்தாலும் புருவங்கள் நெரிந்தன. கண்களில் நெருப்புப் பறக்க, உடனே தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொண்டாள். 'நீ பட்டுக்கோட்டையில் அந்த தாசியை வைத்துக்கொண்டிருப்பது உண்மைதானா?' என்று அமைதியான குரலில் கேட்டாள்.

'இல்லை, அது அபாண்டம், அண்டப் புளுகு' என்றான்.

'இதுவும் அப்படியே தான்.'

'நானும் அப்படித்தான் நினைத்தேன். என்னால் நம்பவே முடியவில்லை. அதுவும் பரங்கியுடனா?' என்றான்.

'வேறு யாருடனாவது இருந்தால் பாதகமில்லை என்று நினைக்கிறாயோ?'

இதற்கு என்ன பதில் சொல்வது என்று குழம்பினான் மாதவன்.

'இல்லை, இருந்தாலும் இவன் ஒரு மிலேச்சன், கிறிஸ்தவன் வேறு' என்றான்.

கிளாவிருந்தா ஒன்றும் பேசவில்லை, அவன் தொடர்ந்து:

'வதந்தியைக் கேட்டதும் என்னால் நம்ப முடியவில்லை. விபரீதமாக இருக்கிறதே என்று நினைத்தேன். ஆனால், நான் உன்னைக் காதலிப்பதால், உன் வாயாலேயே எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள விரும்பினேன்' என்று சொன்னான்.

அவள் வெட்கத்தால் தலைகுனிந்தாள். 'நீ இன்னும் என்னைக் காதலிக்கிறாயா?' என்று கேட்டாள். அவள் குரல் உணர்ச்சியால் நடுங்கியது.

'வெறும் காதல் இல்லை கிளாவிருந்தா. உன்னைப் பூஜித்து வருகிறேன். இது மாறாது. நாட்டிலே அழகியான நீ என் காதலியாக இருக்கும்போது, என் மனைவியின் மரணம் எனக்குச் சிறிதும் கவலை அளிக்கவில்லை. உன் கல்யாணத்தன்று உன்னை முதல் முதலாகப் பார்த்த நாளிலிருந்தே நான் உன்னை நேசித்து வருகிறேன். சோதிட சாஸ்திரம் அல்லவா இந்த அரிய பொக்கிஷத்தை என்னிடமிருந்து பிரித்துவிட்டது என்று தினமும் அதைச் சபிக்கிறேன். இந்தக் காதலும், அதில் என்றாவது ஒரு நாள் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையும் தான் என் பரதேச வாழ்க்கையில் எனக்கு ஆறுதலாக இருந்தது. அன்று நான் உனக்கு இட்ட முத்தங்களை மறக்க முடியுமா? அதைப் போன்ற சுகத்தை வேறு ஒரு பெண்ணிடமிருந்து பெறவும் முடியுமா?

'அந்தத் தாசியைப்பற்றி நீ கேள்விப்பட்டதெல்லாம் அபத்தம். அவள் நன்றாகப் பாடுவாள். ஆதலால் என் வீட்டில் இரண்டொரு கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்தேன். அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு கதை திரித்துவிட்டார்கள்.

என் வாழ்க்கையின் இன்பமே உன் கையில்தான் இருக்கிறது. அதைக் கேட்டுப் பெறத்தான் நான் உன்னிடம் வந்திருக்கிறேன். உன்னைவிட அழகான ஒரு பெண்ணுடன் என் பெயரை இணைத்துப் பேசுகிற அன்று நீ அம்மாதிரி வதந்திகளை நம்பலாம். ஏனென்றால், அப்படி ஒரு பெண் கிடையாது. நான் இன்று உன்னைக் காதலிக்கிறதுபோல, முதல் முதலாக உன்னைக் கண்ட அன்று நேசித்ததுபோல. என்றுமே உன்னையே விரும்புவேன். அன்று கிணற்றடியில் உன்னைப் பார்த்ததிலிருந்து நீயும் என்னை விரும்புகிறாய் என்று நம்பி வந்திருக்கிறேன். உனக்கு என்னிடம் அன்பு இருக்குமானால், இரக்கமாவது இருக்குமானால் இந்த வேதனையை நீடிக்கச் செய்யாதே. இப்பொழுதே என்னுடன் வந்துவிடு. மற்றவர்கள் என்னை என்ன நினைப்பார்கள், பேசுவார்கள் என்பதை எல்லாம் பொருட்படுத்தாமல் நாம் ஒன்றாக வாழலாம்.

'இத்தகைய பரமானந்தம் இந்தப் பூலோகத்தில் வேறு எந்த ஆடவனுக்கும் பெண்ணுக்கும் கிடைக்காது. உன்னைப்போன்ற அழகையும், என்னுடையதைப் போன்ற காதலையும் இதுவரை யாரும் கண்டிருக்க மாட்டார்கள். இந்திரனைப்போல் ஆயிரம் கண்களைப் பெற்று உன் அழகைப் பருகின பிறகும், என் தாபம் தணியாது' என்றான்.

இந்த உத்வேகப் பெருக்கின் நடுவில் குறுக்கிடாமல் அவள் தரையைப் பார்த்துக்கொண்டு, வெட்கத்துடனும் சிந்தனையுடனும் உட்கார்ந்திருந்தாள். அவன் பேசிமுடித்து, அவள் பதிலை எதிர்பார்த்த போதும், சில நிமிடங்கள் அவள் பேசவே இல்லை. நமக்கு மிகவும் பிரியமான ஒருவரைப்பற்றி நாம் கொண்டிருந்த ஆசைக் கனவுகள் சிதைந்து அவரைச் சுற்றி நாம் வளர்த்திருந்த கற்பனைப் பிரகாசம் மங்கி அணைந்து நமது மயக்கம் தெளியும்போது, நெடுநாளாகப் போற்றி வந்த கனவுகளின் ஆசாபங்கத்துக்காக துக்கிப்பது மட்டுமன்றி, அவரைப்பற்றித் தவறாக எடைபோட்ட நமது புத்தியின்மைக்காகவும் அவமானம் அடைகின்றோம். இந்தச் சில நிமிடங்களில் கிளாவிருந்தா அனுபவித்த மனக்கசப்பு அப்படித்தான்

மிக ஆழமானதாக இருந்தது. தனது கற்பனைகளின் கதாநாயகன் பாமரத்தனமாகவும், வெறும் உணர்ச்சி பூர்வமாகவுமே பேசியதை தன் கூர்மையான அறிவினால் உணர்ந்தாள்.

அவள் காதலன் தன்னைப்போல உலகத்தைப் பரந்த நோக்குடன் பார்க்கும் அனுபவத்தைப் பெறவில்லை என்பதை அவள் மறந்துவிட்டாள். அவள் உள்ளத்தில் பிரதிஷ்டை செய்திருந்த தங்க விக்கிரகத்தின் ஆடை ஆபரணங்களைக் களைந்தபோது. அது களிமண்ணால் வனைந்து முலாமும், சாயமும் பூசப்பெற்ற பொம்மை என்று கண்டு ஏமாற்றமடைந்தவள்போல் ஆனாள். அந்த அதிர்ச்சியில்தான் அவள் வாயடைத்துப் போனாள்.

பின் மெதுவாக எதையும் காட்டிக்கொள்ளாமல், 'நான் இப்பொழுது அழகி அல்ல. பல தழும்புகளால் விகார மடைந்துவிட்டேன்' என்று சொல்லி கால்களில் இருந்த தழும்புகளையும், சட்டைக் கையை நீக்கி முழங்கையிலிருந்த வடுவையும் காட்டினாள். 'என் தோள்களிலும் நிறைய வடுக்கள் இருக்கின்றன' என்றாள். இதன் விளைவு என்னவாகும் என்பதில் அவளுக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

'அப்படியா! என்னிடம் யாருமே சொல்லவில்லையே' என்று சொல்லிவிட்டு மௌனமாகத் தழும்புகளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் அதிர்ச்சியடைந்தது மிகத் தெளிவாகத் தெரிந்தது. முகம் விழுந்துவிட்டது. சில நிமிடங்களுக்கு முன்னால் காதல் சொல்மாரி பொழிந்தவனுக்கு, தன் தந்தையின் அற்பப் புத்தியால் கொடுமைக்கு ஆளான இந்த திக்கற்ற பெண்ணுக்கு இவ்வாறு நேர்ந்துவிட்டதே என்ற பச்சா தாபமோ இரக்கமோ உண்டாகவில்லை. மாறாக அழகிய ஓவியம் ஒன்றில் ஆர்ப்பாட்டக்காரன் ஒருவன், தார் எண்ணெயைப் பூசிக் கிறுக்கிவிட்டால் கலைஞன் எப்படித் திடுக்கிடுவானோ அப்படி அதிர்ச்சி அடைந்து திடுக்கிட்டான்.

மாற்றங்களினால் மாறும் அன்பு, அன்பு அல்ல என்று தன் கற்பனைச் சக்தியால் மனித உள்ளங்களின் இரகசியங்களைத் துருவிப் பார்க்கும் கவிஞன் ஒருவன், தன் எழுத்துகள் எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தது போல எழுதி வைத்துச் சென்றான்.

தன் காதலனின் முகத்தைப்போல உள்ளமும் அழகாக இருக்கும் என்று நம்பிய தன் மயக்கம், அவன் தன் உடல்மீது கொண்ட வெறி, இரண்டுமே உண்மையான அன்பு அல்ல என்பதை இப்பொழுது கிளாவிருந்தா உணரலானாள்.

மிகுந்த சிரமத்துடன் பேச்சை வரவழைத்த மாதவன், 'தீக் காயங்கள் ரொம்பவும் பட்டிருக்கிறதே, நாசமாய்ப்போக, அந்த கமலாபாய்!' என்றான். பின் சற்றுக்கழித்து,

'ஆனால், நல்லவேளை உன் முகம் இன்னும் அழகாகவே இருக்கிறது. நான் உன்னைக் காதலிக்கத்தான் செய்கிறேன், என்னுடன் வந்துவிடு' என்றான்.

'நான் இத்தனை விகாரமடைந்த பின்னரும் என்னைக் கல்யாணம் செய்துகொள்ளும் அளவுக்கு என்னை விரும்புகிறாயா?'

'கல்யாணமா? நீ விதவை அல்லவா? கல்யாணத்தைப் பற்றி யார் பேசினார்கள்? அவர்கள் சொன்னதுபோல் உன் புத்தி பேதலித்துத்தான் போய்விட்டதா?'

'பின் நீ என்ன எதிர்பார்க்கிறாய்? என்னோடு வந்துவிடு நாம் சுகமாக வாழலாம் என்று சொன்னதின் பொருள் என்ன? நாடெல்லாம் சிரிப்பாய்ச் சிரிக்க கமலாபாயும் உன் பெரியப்பாவும் இருந்தார்களே அந்தமாதிரி என்னையும் உன் ஆசைநாயகி'யாக வந்து இருக்கச் சொல்கிறாயா?'

'கமலாபாய் துக்கிரி, அவள் வெட்கங்கெட்டு வெளிப்படையாக பெரியப்பாவுடன் இருந்து வந்தாள். அவளைப் போலொத்தவர்களை வெட்டிப்போடவேண்டும். ஆனால் நீ அப்படி அல்லவே. நீ குணவதி, அழகியும்கூட. நான் உன்னைக் காதலிக்கிறேன். நீ உன்னுடைய வீட்டுக்கே திரும்பிவந்து' அங்கு கைம்பெண் வாழ்க்கை நடத்திக்கொண்டிரு. நானும், சந்தேகத்தையும், வம்பையும் தவிர்ப்பதற்காக மறுமணம் செய்துகொள்கிறேன். நமது காதலையும் இன்ப வாழ்க்கையையும் ஒருவரும் அறிந்துகொள்ள முடியாதபடி மறைத்து விடலாம். முதலாவதாக, நமது மாற்றாந்தாய்-மகன் உறவு முறையே சந்தேகத்தைக் கிளப்பாது. நமது கதை வேறு, கமலாபாய் கதை வேறு' என்றான்.

கிளாவிருந்தாவுக்கு யாரோ தன்னை முகத்தில் அறைந்தது போலிருந்தது. ஆனால், மீண்டும் சிரமத்துடன் தன் உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டாள். அந்தச் சூழ்நிலையில் வளர்ந்த ஒருவனிடம் இதைவிட உயர்ந்த இலட்சியங்களை எதிர் பார்த்தது தன்னுடைய தவறுதான் என்று நினைத்தவள்போல் அமைதியுடன் பேசலானாள்.

'நீ சொல்லும் திட்டத்தை நான் ஒப்புக்கொண்டால், என்னுடைய அழகோ, உன்னுடைய காதலோ, நமது உறவு முறையோ, இரகசிய முறைகளோ எதுவுமே என் நிலையை மாற்றவோ, கமலாபாயினுடையதைவிட என்னுடைய துக்கிரித்தனத்தைக் குறைத்துவிடவோ செய்யாது. ஒருதரம் அப்படி ஓர் இழிநிலைக்கு இறங்கிவிட்டேனானால் பின் மேலும் மேலும் பழி பாவங்களைச் செய்யும் தூண்டுதலுக்கு ஆளாவேன் என்றுதான் நினைக்கிறேன். நீ கலியாணம் செய்து கொள்ளும் மனைவியை பொறாமையினால் அழிக்க முற்படுவேன். கமலாபாயைப் போன்று நான் இதற்கு ஒப்புக்கொள்வேன் என்று நினைத்தாயானால் அது மிகத் தவறு. நானும் உன்னைத் தவறாகவே புரிந்துகொண்டிருந்திருக்கிறேன். அதை இன்று அறிந்தது எனக்கு எத்தனை வேதனையாக இருக்கிறது என்பதை அந்தக் கடவுள் ஒருவர்தான் அறிவார். ஆனால், உன்னைக் குற்றம் சொல்வதிலும் பயனில்லை. உனக்குத் தெரிந்தது அவ்வளவு தான். நீ இன்னும் என்னைக் காதலிப்பதாகச் சொல்லுகிறாய். என்னுடைய நெஞ்சின் அடித்தளத்தில் உன்னைச் சுற்றிப் பதிந்துவிட்ட என் கனவும் கலைய மறுக்கிறது. அதனால்தான் நீ என்னை இப்படி அவமானப்படுத்திய பின்னும் உன்னிடம் பேசிக்கொண்டிருக்கிறேன்.

'நான் இப்பொழுது விதவை. நீ தாரமிழந்தவன். அவர் காலத்தின் மிகச் சிறந்த அறிவாளியாகக் கருதப்பட்ட என் பாட்டனார், பழங்காலத்தில் பிராமண விதவைகள் மறுமணம் செய்துகொண்டதாகவும் பின்னர் அந்த வழக்கம் மறைந்து விட்டதாகவும் சொல்லியிருக்கிறார்.

'நாம் அந்த வழக்கத்தைப் புதுப்பிக்கலாம். ஆனால்,

நீ என்னை அழகியென்றும், நான் உன்னை அழகனென்றும் கொண்டாடுவதற்காகவோ அல்லது நமது உடல் இச்சைகளை சமனப் படுத்துவதற்காகவோ அல்ல. உடலழகை ஆதாரமாகக் கொண்ட அன்பு நாளடைவில் அழிந்துவிடும். அழகில் சிறந்த இன்னொருத்தியைக் கண்டதும் குறைந்துவிடும்.

'அப்படிப்பட்ட கேளிக்கைகளுக்காகவும் இன்பங்களுக்காகவும் மாத்திரம் நாம் பிறக்கவில்லை. நம்மைச் சுற்றிலும் எவ்வளவு அறியாமையும் குருட்டுப் பக்தியும் அதன் காரணமாக இன்னல்களும் துன்பங்களும் சூழ்ந்திருக்கின்றன என்று கவனித்துப்பார். இவைகளெல்லாம் தவிர்க்கப்படக் கூடியவைகளே. உன்னுடைய விரகத் தீயை பட்டென்று அணைத்துவிட்ட இந்த என் விகாரமான வடுக்களை, கமலாபாய், கல்யாணிபாய் போன்று அறியாமையில் மூழ்கிக்கிடக்கும் என் சகோதரிகளுக்கு நான் செய்யவேண்டிய கடமைகளை உணர்த்துவதற்காக, கடவுள் எனக்கு இட்ட முத்திரைகளாகவே கருதுகிறேன். ஆனால், நான் இன்னும் இளம் பிராயத்தவளாகவும், உலக அறிவு நிரம்பாதவளாகவும் இருப்பதால் இந்த நகரில் மலிந்துகிடக்கும் துயரத்தில் ஒரு சிறிதைப் போக்க முயல்வதானால்கூட எனக்குத் தகுந்த பலம் வாய்ந்த ஓர் ஆண் துணை தேவையாக இருக்கும். நீ என்னை இன்னும் விரும்பினால், நான் இப்பொழுது சொல்லிய அந்த உயரிய பணியைச் செய்ய உன்னை நீ அர்ப்பணித்துக்கொள்ளத் தயாராக இருந்தால், அந்தப் புனித கைங்கரியத்தின் முதல் படியாக விதவையான என்னை மறுமணம் செய்துகொள். அப்படியானால்தான் நமது வாழ்க்கையில் சிறுமையும் பழியும் அணுகாமல், பரஸ்பர அன்புடன் கடவுளின் ஆசிகளோடு, அறியாமையில் மூழ்கியிருக்கும் நமது சகோதர சகோதரிகளின் வாழ்க்கையை இன்னும் சிறந்ததாக, மகிழ்ச்சியுள்ளதாகச் செய்யமுடியும். இது ஓர் ஆண் மகனின் ஆர்வத்தைத் தூண்டும் முயற்சி. இதில் அவன் வெற்றி அடைந்தால் இதுவே அவன் காதலிக்கு அளிக்கும் சிறந்த பரிசாக இருக்கும் என்றும் கருதுகிறேன். ஓர் இளைஞனிடம் ஒரு பெண் சாதாரணமாகப் பேசும் விஷயம் அல்ல இது என்பதை அறிவேன். ஆனால், ஆர்வம் என்னை உந்தித் தள்ளுவதாலேயே இப்படிப் பேசுகிறேன். வேண்டுமானால் இதைப்பற்றிச் சிந்திப்பதற்கு அவகாசம் எடுத்துக்கொள். ஒரு முடிவுக்கு வந்தபின் மீண்டும் என்னிடம் வா' என்றாள்.

மாதவன் தாங்க இயலாத திகைப்புடன், 'பிராமண விதவைகள் மறுமணம் செய்துகொள்வதாக நாம் கேள்விப்பட்டதே இல்லையே. மறவர்கள், சாணார்களிடையே (ஒரு பிரிவினர்) அந்த வழக்கம் இருந்து வருகிறது. ஆனால், இரு பிறப்பாளர்களாகிய நம்மவர் அப்படிச் செய்வது விபரீத மல்லவா? நீ பேசுவதைக் கேட்டால் அதிர்ச்சியில் உனக்கு மூளை குழம்பிவிட்டது என்று அப்பாவும் கமலாபாயும் சொன்னது உண்மை தானோ என்றே நினைக்கத் தோன்றுகிறது அல்லது அந்த ஆங்கிலேயன் மிலேச்சக் கருத்துக்களை உன் மண்டைக்குள் புகுத்திவிட்டானோ?' என்று கேட்டான்.

'ஆனால், இரு பிறப்பு உடைய ஒரு பிராமண விதவை திருட்டுத்தனமாக ஒருவனுடனோ அல்லது பலருடனோ வாழ்ந்தும் அல்லது அது முடியாமல் மருகி மாய்ந்துபோவதும்,

அவமானப்படவேண்டிய விஷயமல்லவா? மறவர்கள், சாணார்கள் (ஒரு பிரிவினர்), மிலேச்சர்கள் வழக்கப்படி கணவனை இழந்த பெண் மறுமணம் செய்துகொள்வது எவ்வளவு கௌரவமானது! நீ மறுமணம் செய்துகொள்ள மாட்டாயா? ஐம்பது வயதில் உன் பெரியப்பா செய்துகொள்ள வில்லையா? அதைவிட வயதான எத்தனைபேர் சின்னஞ்சிறுமிகளைச் செய்துகொள்ளுகிறார்கள்?'

'ஆண்கள் அப்படிச் செய்துகொள்ளலாம் என்று நமது சாஸ்திரங்களும் வழக்கங்களும் அனுமதிக்கின்றன. பெண்கள் புனிதமாக இருக்க வேண்டாமா?'

'ஆனால், அது நியாயமா? அல்லது அந்த விதிப்படி பெண்கள் புனிதமாக இருந்துதான் வருகிறார்களா? ஒரு பாலாருக்கு மட்டும் இப்படி ஒரு கடினமான விதியை ஏற்படுத்திவிட்டு அடுத்த பாலாருக்கு ஏகப்பட்ட சுதந்திரம் வழங்குவதற்கு யாருக்காவது அவர் எப்பேர்ப்பட்ட ஞானியாக அல்லது முனிவராக இருந்தபோதிலும் அதிகாரம் இருக்கிறதா? ஏழைகள், திக்கற்றவர்களுடைய கண்ணீர்த் துளிகளைக் கடவுள் கணக்கு வைத்துக்கொண்டிருக்கிறார். நமது இனத்தினர் தங்கள் வலுவை இழந்து முகம்மதியருக்கும் பரங்கிகளுக்கும் அடிமையாகிக் கொண்டிருக்கிறார்கள் என்றால், அது வலியவர் எளியவரை வாட்டுவதற்குக் கடவுள் கொடுக்கும் தண்டனையே ஆகும். முகம்மதியரும் பரங்கியரும் நாள்தோறும் முன்னேறிக்கொண்டு வருகிறார்கள் என்றால், அவர்களிடையே இப்படிப்பட்ட கொடூரமான பழக்கங்களும், அநியாயமான சாதிக் கட்டுப்பாடுகளும் இல்லாமையே காரணமாகும். நமது இனத்தினரின் உயிர்ச்சத்தை மெதுவாக உறிஞ்சி நமது தினசரி வாழ்க்கையை கசப்பும் இருண்டதுமாக்கும் இந்தத் தீய வழக்கங்களை எதிர்த்துப் போராடுவதற்கு நீ எனக்குத் துணைசெய்யவேண்டும். வாழ்க்கையை நிறைவு பெறச்செய்யும் உன்னத தொழிலாக இது உனக்குத் தோன்ற வில்லையா?' என்று ஆர்வமிகுதியால் கண்கள் பளபளக்கக் கேட்டாள். அந்த அழகில் மயங்கி அவற்றையே பார்த்துக் கொண்டிருப்பது சந்தேகமின்றி, உன்னத தொழிலாகத்தான் இருக்குமென்று தோன்றியது மாதவனுக்கு. ஆனால், அவளுடைய சொற்களோ அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்ற சந்தேகத்தையே வலியுறுத்துவதாகத் தோன்றின.

'நான் உன்னை எப்படித் திருமணம் செய்துகொள்ளமுடியும்? அது அசம்பாவிதம். சாத்தியமே இல்லாதது. உனக்கும் அது தெரியும். உனக்கு என்னிடம் அன்பு இருக்குமானால் வம்புப் பேச்சுக்கு இடம் தருகிற- இந்த மிலேச்சனோடு வாழும் வாழ்க்கையை விட்டுவிட்டு என்னுடன் நமது வீட்டுக்கு வா. குடும்பப் பெயருக்குக் களங்கம் உண்டுபண்ணாதே.'

அவள் எழுந்துகொண்டே, 'குடும்பப் பெயருக்கு என்னால் களங்கம் வருமென்று யாரும் பயப்படத் தேவையில்லை. ஆனால், நான் கொண்டிருந்த நம்பிக்கை வீணாகிவிட்டது என்றாள்.'

**தொடரும் ...**







# சாமி சிலைகளை உடைத்தெறிந்த பூசாரி


**ராஜ்ஜா**

**புதுச்சேரி**


இங்கிலாந்து ஒரு காலத்தில் 'சேக்ஸன்ஸ்' என்பவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தது. இவர்கள் ஜெர்மனி நாட்டில் உள்ள வடக்கு டேனிஷ் சமவெளியைச் சார்ந்தவர்கள். அதே நாட்டின் வேறொரு பகுதியான ரைன் பிரதேசத்துக்காரர்களான 'பிராங்க்ஸ்' என்ற இனத்தவரோடு சண்டை போட்டு, தோற்றுப் போய் வேறு வழி தெரியாமல் ஜெர்மனி நாட்டை விட்டு வெளியேறி ஆங்கில் லாண்ட் (தற்போதைய இங்கிலாந்து) என்று அழைக்கப்பட்ட நிலப்பகுதிக்கு வந்து சேர்ந்தனர். அங்கு வாழ்ந்து கொண்டிருந்த 'ஆங்கில்ஸ்', 'ஜட்ஸ்' இனத்தவரை அடக்கி ஆங்கில் லாண்டை தங்களது ஆட்சியின் கீழ் கொண்டு வந்தனர். பின்னர் மற்ற இரண்டு இனத்தவரோடும் திருமண பந்தத்தில் ஒற்றுமையாக வாழ்ந்து ஆங்கில் லாண்டுக்கு இங்லாண்ட் என்று பெயர் மாற்றி அமைதியாகவே வாழ்ந்தனர் என்று இங்கிலாந்து நாட்டு சரித்திரம் சொல்கிறது.

சேக்ஸன்ஸ் ஆட்சியின் கீழ் இருந்த இங்கிலாந்தில் பல கடவுளர் வழிபாடு இருந்தது. இதில் இருவர் மிகப் பிரசித்தி பெற்றவர்கள். ஒருவர் தார். மற்றவர் வோட்டன். இவர்கள் சகலமும் அள்ளித்தரக்கூடிய கடவுள்கள் என்று மக்கள் நம்பினர். நம்ப வைக்கப்பட்டனர் என்றும் சொல்லலாம். சிறுதெய்வ வழிபாடும் நிறையவே இருந்திருக்கிறது. இவர்களுக்கு பல கோயில்கள். ஆள் உயரச் சிலைகள். அவைகளுக்கு சகல விதமான அபிஷேகங்கள். வழிபடுவோருக்கு பிரசாதம். மற்றும் இத்யாதி…இத்யாதி.

சேக்ஸன்ஸ் ஆண்டு கொண்டிருந்த காலத்தில், இங்கிலாந்து நாட்டில் ஒரு சிறு பிரச்சினை…பின் அது பூதாகரமாக உருவெடுத்தது.

நார்தம்பிரியா மாநிலத்தை ஆண்ட மன்னர் எட்வின் ஒரு நாள் கூட்டிய ஆலோசனை சபையில்தான் அந்தப் பிரச்சினை கிளப்பப்பட்டது. இந்த மன்னரும் ஒரு தினுசான ஆள்தான். சிறுவயதில் இவர் தன் உயிரை காப்பற்றிக் கொள்ள தன் நாட்டை விட்டு வெளியே போக வேண்டியதாகிப்போனது. எதிரி மன்னனும் இவர் தலைக்கு ஒரு விலையையும் வைத்துவிட்டான். அசகாய சூரனான எட்வின் மிகக் குறைவான காலத்திலேயே பெரும் படையைத் திரட்டி இங்கிலாந்தின் பல பகுதிகளையும் ஆக்கிரமித்துக் கொண்டான். இவனை ஒரு காலத்தில் எதிர்த்த வெல்ஷ் மற்றும் பல இனத்தவர்கள் உயிருக்கு பயந்து இவனுக்கு

கொடி பிடித்தனர். எட்வின், மன்னர் பதவியிலிருந்து மாமன்னர் பதவிக்கு உயர்த்தப்பட்டான்.

மாமன்னனாக முடி சூட்டிக்கொண்டதும் எட்வின் செய்த முதன் வேலையே, தனக்கென ஒரு ராணியை தேடியதுதான். அதுவும் தன் எதிரிகளின் கொட்டத்தையெல்லாம் அடக்கும் விதமாக கென்ட் மாநில மன்னன் ஈத்பால்டினிடம் சென்று அவனது தங்கை ஈத்தல்பாகுவை தனக்கு திருமணம் செய்து வைக்கச் சொன்னதுதான். மறுப்பு ஏதும் தெரிவிக்காத மன்னன், திருமணத்திற்கு ஏற்பாடு செய்துவிட்டான். பாவம் ஈத்தல்பர்க். மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் என்ற நிலைக்கு தள்ளப்பட்டாள். திருமணம் முடிந்து கணவன் வீடு செல்லும் தறுவாயில், தன்னை மணமுடித்தவனிடம், "ஒரே ஒரு நிபந்தனை" என்றாள்.

திடுக்கிட்டுப்போன மாமன்னனோ, எதுவாக இருந்தாலும் சொல். நிச்சயம் காது கொடுத்துக் கேட்கிறேன்,' என்றான். "பெரியதாக ஒன்றும் இல்லை. புகுந்த இல்லத்திலும் நான் பிறந்த இல்லத்தில் வழிபட்டுவந்த ஏசு கிறிஸ்துவையே வணங்க அனுமதியளிக்க வேண்டும். சிலுவை இல்லாத எந்தக் கோயிலுக்குள்ளும் நான் நுழைய மாட்டேன். என்னை எந்தக் காரணம் கொண்டும் வற்புறுத்தக்கூடாது," என்று அடித்துச் சொன்னாள்.

புது மனைவியின் மேல் கொண்ட மோகத்தால், மோகத்தால், தாகத்தால் மாமன்னன் 'ஊங்' கொட்டிவிட்டான். ஈத்தல்பர்க் புறப்பட்டாள், கூடவே பாலினஸ் பாதிரியாரையும் அழைத்துக் கொண்டு. பாதிரியார் எக்காரணத்தைச் சொல்லியாவது விரைவில் மாமன்னன் எட்வினை மதமாற்றம் செய்து விடுவார் என்ற நம்பிக்கையில். மன்னர் எவ்வழியோ மக்களும் அவ்வழிதானே. வந்த வேலை சுலபமாக முடிந்துவிடுமே.

ஈத்தல்பர்க் புதிய ராணியாக பதவி ஏற்றுக் கொண்ட பின்புதான் அந்தச் சிறு பிரச்சனை தலை தூக்கியது. ராணி ஒரு இளவரசியை பிரசவித்தாள். மாமன்னர் அவளது பிரசவ காலத்தில் போர்க்களத்தில் இருந்தார். எதிரி மன்னன் ஒருவனோடு சண்டையிட்டுக் கொண்டிருந்த நேரத்தில் மகள் பிறந்த செய்தி கிடைத்தது. சந்தோஷத்தில் அவன் தன் மனைவிக்கு அனுப்பிய செய்தியில், குழந்தைக்கு அவள் குடும்ப வழக்கப்படி ஞானஸ்நானம் கொடுக்கலாம் என்றும், போரில் வெற்றி வாகை சூடி அமைதியை நாடி அரண்மனை திரும்பியதும் தன் மூதாதையர் வணங்கிய கடவுள்களையெல்லாம் புறந்தள்ளிவிட்டு மனைவியின் மதத்தில் ஒன்றிவிடுவதாக வாக்குறுதி அளித்திருந்தான்.

போரில் தோற்று விடுவோம் என்ற நினைப்பில் அப்படி வாக்குறுதி அளித்தானோ என்னவோ? பாவம், வெற்றி பெற்றுவிட்டான். பிரச்சினை துளிர் விட ஆரம்பித்தது. அவனால் தன் வாக்குறுதியை காப்பாற்ற முடியவில்லை. தன் பிரஜைகளின் கடுங்கோபத்திற்கு ஆளாகிப் போக வேண்டியிருக்குமே என்ற பயத்தின் காரணமாகத்தான்.

ஒரு வழியாக வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டிக் கொண்டு தனது மகா சபையைக் கூட்டினான். இதில் தளபதிகள், விவேகிகள், அனுபவசாலிகள், பகுத்தறிவு கொண்டவர்கள், பாண்டித்தியம் பெற்றவர்கள் என்று பலரும் அடங்குவர். இவர்களையெல்லாம் ஒன்று சேர்த்து தன் தலைமையின் கீழ் வழி நடத்திக் கொண்டு வந்தவர் கோய்ஃபூ இவரே வோட்டன் கோயிலின் தலைமை குரு.

மகா சபையில் ஒருவர் ஒன்று கூற, இன்னொருவர் ஒன்று கூற, மற்றவர் யார் பக்கம் பேசுவது என்று புரியாமல் குழம்பிப் போய் வாய் திறக்க முயற்சித்து, முயற்சித்து இறுதியில் எந்த முடிவும் எடுக்காத நிலையில், கோய்ஃபூ தன் இருக்கையில் இருந்து திடீரென எழுந்திரித்து நின்றார். வெட்டு ஒன்று துண்டு ரெண்டு என்று சொல்வதைப் போல, "இத்தனை காலமா எந்தெந்த சிலைகளையோ வைத்துக் கொண்டு கும்பிட்டு, விழுந்து வணங்கி வேண்டிக் கொண்டோமே. அதனால் யாருக்காவது எந்த பயனாவது கிடைத்ததா? யாராவது ஒருத்தருக்காவது?" என்று சொல்லிவிட்டு சுற்றி சுற்றிப் பார்த்தார், யாராவது "எனக்குப் பலன் கிடைத்தது" என்று சொல்லி கை தூக்க மாட்டார்களா என்று நினைத்து. சொல்லிக் கொள்ளும் அளவிற்கு ஒன்றும் இல்லை என்பது போலவே சபையினர் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

கோய்ஃபூ சிரித்துக் கொண்டே, 'பதில் கிடைக்காத சமயத்திலே இந்த சங்கதியை மாமன்னரிடமே விட்டுவிடலாம். அதுவே புத்திசாலித்தனம்,' என்று சொல்லிவிட்டு அமர்ந்தார்.

உடனே நரை, திரை, மூப்பு போன்ற அனைத்து வரங்களையும் ஒன்றாகப் பெற்ற ஒரு வயோதிகர் தன் இருக்கையில் அமர்ந்தபடியே பேச ஆரம்பித்தார்: 'மாமன்னரே! கடுங்குளிர் காலத்தில் நாமெல்லாம் வீட்டிற்குள்ளே நெருப்பு மூட்டி குளிர் காய்ந்து கொண்டிருக்கும் போது, வெளியிலிருந்து ஒரு சிறு குருவி எங்கிருந்தோ பறந்து உள்ளே வந்து சற்றே நெருப்பு மூட்டத்தின் மேல் பறந்து ஒரு வட்டம் அடித்துவிட்டு மீண்டும் வெளியே பறந்து போவதைப் போலத்தான் நமது வாழ்க்கையும். அக் குருவி எங்கிருந்து உள்ளே வந்தது, பின் மீண்டும் எங்கே பறந்து போனது என்று சொல்ல யாரால் முடியும்? நாம் இங்கு வருவதற்கு முன் எங்கிருந்தோம், நாம் இங்கு வந்த வேலை முடிந்ததும் எங்கு செல்வோம் என்பது யாருக்கும் தெரியாது. இந்த மகாசபையில் இருப்பவர் யாருக்காவது அது தெரிந்திருந்தால் அவர் சொல்லட்டும். நாமெல்லாம் காது கொடுத்துக் கேட்கலாம்.'

அந்த மூதறிஞர் சொன்னது பலருக்கு ஏதோ ஒன்றை வெளிச்சம் போட்டுக் காட்டியது. மதம் என்றால் என்ன என்பதை சரிவர அறியாமலேயே இருட்டறையில் வாழ்ந்து கொண்டிருந்தவர்களுக்கு குருவி அவ்விருளை கிழித்துக் கொண்டு சென்றதை நினைத்து எங்கிருந்தோ வெளிச்சம் பரவ இருப்பதாக எண்ணி மகிழ்ந்தனர்.

மாமன்னனுக்கும் எங்கோ பொறி தட்டியது. பிரச்சனைக்கு முடிவு யார் வாயிலிருந்தாவது வெளிவரட்டும் என்று அமைதி காத்தான். கோய்ஃபூவே மீண்டும் எழுந்து பேச ஆரம்பித்தது அவனுக்கு அந்த பதட்டமான நிலையில் மிகுந்த ஆறுதலாக இருந்தது. எழுந்தவர் சொன்ன வார்த்தைகள் மிகச் சொற்பமே: 'பாலினஸ் பாதிரியார் வாய் திறக்கட்டுமே.'

பாதிரியாரும் பிரசங்கம் செய்தார். அனைவருமே கவனித்துக் கேட்டனர்.

கோய்ஃபூ மீண்டும் எழுந்தார். 'பாதிரியார் சொன்னதுதான் உண்மை. நாம் இத்தனை காலம் வணங்கிய கடவுளர்களால்தான் நமக்கு எந்த நன்மையும் இல்லையே. எனவே, மாமன்னரே, நான் சொல்ல நினைப்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். கடவுள் என்று நாம் வழிபடும் சிலைகளையெல்லாம் உடைத்தெறிந்துவிட்டு கோயில்களையெல்லாம் எரித்து விடலாம்,' என்று அவர் சொன்னதும் மகாசபையில் ஒரு நொடி மயான அமைதி நிலவியது. பின்னர் முணுமுணுப்பு ஆரம்பித்து வளர்ந்து கொண்டே போனது. எல்லோருமோ மாமன்னனின் வாயையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

'அப்படியென்றால் யார் முதலில் அந்த காரியத்தை துவக்கி வைக்கப்போவது?' மாமன்னன் ஒரு போடு போட்டான்.

'நான்தான்... நான்தானே நம் மக்களை கோயிலுக்குள் நுழைந்து வழிபடச் சொன்னவன். என் தவறை நான் உணர்ந்து விட்டதால், நானே அக்காரியத்தைச் செய்கிறேன். எனக்கு ஒரு குதிரையும், ஆயுதங்களும் கொடுத்தருளுங்கள். பொய்க் கடவுள்களையெல்லாம் காணாமல் போகச் செய்கிறேன்,' என்றார் கோய்ஃபூ

கேட்டவை கிடைத்ததும், ஒரு ராணுவ வீரனைப் போல் உடை தரித்து, இடுப்பில் வாள், கையில் ஈட்டியொடு குதிரை ஏறி புறப்பட்டுவிட்டார். ஏதோ பேய் பிடித்தவரைப் போல, சினம் ஏறிய கண்களோடு பாய்ந்து சென்று தான் தலைமை குரு என்பதையும் மறந்து, வோட்டன் கோயிலின் மூடப்பட்ட கதவுகளை ஈட்டி கொண்டு பிளந்துத் தள்ளினார். பின்னர் உள்ளே நுழைந்து அவர் இது நாள்வரை மக்களை வணங்கச் செய்த வோட்டனின் சிலையை உடைத்து எறிந்தார். அவர் பின்னால் ஓடி வந்தவர்களிடம் கோயிலை எரித்து விடுமாறு பணித்தார்.

எல்லா கோயில்களிலும் நின்றிருந்த போலி சாமி சிலைகளும் கை வேறு, கால் வேறு, உடம்பு வேறு என்று பல இடங்களில் சிதறிப் போய் கிடந்தன. மர வேலைப்பாடுகளால் ஆன கோயில்கள் தீக்கு இரையாகி சாம்பல் கிடங்கினைப் போல காட்சியளித்தன. தார், வோட்டன் போன்ற கடவுளர்கள் சரித்திரத்திற்குள் போய்ச் சேர்ந்தனர்.

சேக்ஸன் காலத்திய இங்கிலாந்திற்கு கிறிஸ்துவ மதம் விடியலைக் கொடுத்தது. மக்களும் விடியலைக் கண்டு பெரு மகிழ்ச்சி கொண்டனர். எங்கும் எந்த அசம்பாவிதமும் நடக்கவில்லை. முழு மனதோடு மக்கள் ஏசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டனர்.

மாமன்னன் எட்வினும், அவனது அனைத்துத் துறை அதிகாரிகளும் யார்க் நகர் சென்று கிறிஸ்து உயிர்தெழுந்த தினத்தன்று 627-ஆம் ஆண்டு ஞானஸ்நானம் பெற்றனர். இவர்களோடு கோய்ஃபூவும் பெற்றார். நடத்திவைத்தவர் பாலினஸ் பாதிரியார்தான்.

நடத்தேறிய இடம் எட்வின் கட்டிய தேவாலயத்தில்தான். அதுவே இங்கிலாந்து நாட்டின் முதல் தேவாலயம். யார்க் நகரில் இன்றும் வானுயர்ந்து நிற்கும் தேவாலயமும் அதுவே. அந்த தேவாலயத்திற்கு முதல் மதகுரு, (சொல்லித்தான் தெரிய வேண்டுமா?) கோய்ஃபூவெதான். மாற்றம் மட்டுமே மாறாதது என்பதில் எந்த சந்தேகமும் இல்லை.





**David Vayanan Thomas**
**Tirunelveli.**

# பிற மத சமுதாய மக்களுடன் நமது உறவு

காலத்திற்கேற்ற தலைப்பில் என்னை ஒரு கட்டுரை எழுதுமாறு கேட்டுக்கொண்ட வரலாற்றுச் சுவடுகள் ஆசிரியர் அவர்களுக்கு நன்றி.

சமய வேறுபாடுகளை நாம் வைராக்கியத்தோடு பெரிதுபடுத்துவதில்லை. அதுவே தேவனுக்கு உகந்தது. ஆனால் சமீபகாலமாக அரசியல் பதவி ஆசை பிடித்த ஒரு கூட்டம் இந்து சமயத்தவர்களுக்குப் பிற சமயத்தவர் மீது கொடும் பகைமை உணர்வைத் தூண்டும் செயலைத் துல்லியமாகத் திட்டமிட்டு செயல்படுத்திக்கொண்டிருக்கின்றது. இத்தகைய சூழ்நிலையில் நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் ?

இக்கேள்விக்கு விடைகாண கிறிஸ்தவ விசுவாசிகளாகிய நாம் முதலாவது சத்திய வேதத்தைத்தான் தேடிப்பார்க்கவேண்டும். அதனுடன்கூட எனது சொந்த அனுபவத்தையும் கூட்டி வழங்கி ஒரு தெளிவினை முன்வைக்க விரும்புகிறேன். அன்று தீபாவளி நாள். ஒரு கிறிஸ்தவக் குடும்பத்தினர் மதிய உணவு முடித்துப் பின் அனைவரும் உட்கார்ந்து பேசிக்கொண்டே (இந்த நாட்களில் இது நடக்கிற காரியமா?) இரண்டு அண்டை வீட்டார் காலையில் வந்து கொடுத்துவிட்டுப்போன தீபாவளி பட்சணங்களை சுவைத்து சாப்பிட்டுக்கொண்டிருக்கின்றனர். திடீரென்று கல்லூரியில் படிக்கும் வாலிபத் தம்பி ஒரு கேள்வியெழுப்புகிறான்.

“நாமல்லாம் இந்த sweets-அ நல்லா சாப்டிட்டு இருக்கோமே, நம்ம எல்லாரும் பரலோகத்தில இருக்கப்ப இந்த பட்சணங்களெல்லாம் குடுத்த families நரகத்திலயா இருப்பாங்க” ?. சற்று நேரம் மயான அமைதி. அப்பாதான் முதலில் மௌனத்தைக் கலைக்கிறார்.

“அவுங்கல்லாம் பரலோகத்துக்கு வரல்லன்னா நாம இந்தமாதிரி tasty ஷ்மிளதுவி சாப்பிட முடியுமா ?. உங்க அம்மா செய்ற கேசரியத்தான் அங்கயும் சாப்பிடணும்”

“என்ன என்னப்பத்தி பேச்சு அடிபடுது?. பரலோகத்துலயும் வந்து நான்தான் சமயல் பண்ணிப்போடுவேன்னு நெனக்கிறீங்களா ? அங்கல்லாம் அவுங்க அவுங்க சமயல் பண்ணிக்கிடணும்‘. அம்மா shock குடுக்குறாங்க எல்லாருக்கும். வேதாகமம் என்ன சொல்கிறது என்று ஒருவருக்கும் தெரியவில்லை.

பல வேளைகளில் கிறிஸ்தவ போதனைகளும் பாடல்களும் கிறிஸ்தவர்களைத்தவிர மற்றவர்கள் நரகத்திற்குச் சென்றுவிடுவார்கள் என்பதுபோன்று அமைந்துவிடுகின்றன. இத்தகைய எண்ணத்துடன் நாம் வாழ்வோமேயானால் பிற சமயத்தவர்களோடு நம் உறவு நமக்கு ஒரு superiority complex-ஐ ஏற்படுத்திவிடும். வேத சத்தியம் அதுவல்ல.

**சத்திய வேதத்திலிருந்து ஒருசில பகுதிகளைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.**

1. ரோமர் 2: 13-16. நியாயப்பிரமாணத்தை அறியாதிருந்தும் அது போதிக்கும் நன்னெறிகளைக் கடைப்பிடிப்பவர்களுக்கு நித்திய ஜீவன் உண்டு.

2. மத்தேயு 25:31-46. விசுவாசிகளின் இக்கட்டுகளிலும்

இடுக்கண்களிலும் உதவுகின்ற பிறர் இயேசுவிற்கே உதவுகின்றனர், நித்திய ஜீவனையும் அடைந்துகொள்கின்றனர். இவர்களே செம்மறியாடுகள். இந்தப் பகுதியில் 'பரிசுத்த தூதர்கள்' என்னப்படுபவர்களும் 'மிகவும் சிறியவராகிய என் சகோதரராகிய இவர்கள்' என்பவர்களும் விசுவாசிகளாகிய நாம்தான்.

3. லூக்கா 10: 17-35 -இல் நாம் 'நல்ல சமாரியன்' பகுதியைப் பார்க்கிறோம். (25-37 அல்ல, 17-இலிருந்தே துவங்குகின்றது). 'நித்திய ஜீவன்' என்பதுதான் இப்பகுதியின் மையக்கருத்து, 'துன்பத்திலிருக்கும் ஒருவருக்கு உதவ வேண்டும்' என்பது அல்ல. வசனம் 36 -இல் நியாயசாஸ்திரியை நல்ல சமாரியனோடு ஒப்பிட்டு அவன் செய்ததைப்போல் நீயும் செய் என்று ஆண்டவர் சொல்லவில்லை. மாறாகக் கள்வனிடம் அகப்பட்ட மனிதனுடன் அவரை ஒப்பிட்டுப் பேசுகிறார். "நித்திய ஜீவன் உனக்குத்தான் உண்டு என்று கருதும் நீ, துன்பத்தில் நீ இருக்கும்போது உனக்கு உதவும், (மெய்யான தேவன் யாரென்று தெளிவான புரிந்துகொள்ளல் இல்லாத) சமாரியனுக்கும் அந்த பாக்கியம் கிடைக்கவேண்டும் என்று நினைக்கவேண்டும்" என்பதே ஆண்டவரின் அறிவுரை.

எத்தனை முறை நமக்கு ஹிந்துக்களும், முஸ்லிம்களும் உதவியிருக்கிறார்கள் என்று நினைத்துப் பார்க்கவேண்டும். எத்தனை முறை மருத்துவ உதவிக்கு நாம் கிறிஸ்தவரல்லாத மருத்துவரை அணுகியிருக்கிறோம். அவர்களும் தெய்வ பயத்தோடே நமக்கு சிகிச்சையளித்திருக்கிறார்கள்.

கடைசி கால நாட்களில் மோசம் போக்கும் பிசாசானவன் அழிக்கப்பட்ட பின்னர் இவர்களும் உயிர்ப்பிக்கப்பட்டு ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை அறிந்து அறிக்கைசெய்து முழங்கால்களை முடக்குவார்கள், பரலோகத்திற்குள் பிரவேசிப்பார்கள்.

இப்போது வாழ்கின்ற நாம் பிற சமயத்தாரோடு எப்படி நடந்துகொள்ளவேண்டும் ?

பிற சமயத்தாரும் நம்மோடு பரலோகத்தில் வாழப்போகின்றவர்கள் அல்லது வாழவேண்டியவர்கள் என்ற உணர்வோடு பழக வேண்டும். நம்முடைய சபையிலேயே இருக்கின்ற சக விசுவாசிகளுடன் நாம் நல்ல நட்புணர்வோடு நடந்துகொள்ளவில்லையென்றால் முதலாவதாக அந்த உறவினை சீர்படுத்தவேண்டும்.

**இப்போது வாழ்கின்ற நாம் பிற சமயத்தாரோடு எப்படி நடந்து கொள்ள வேண்டும் ?**

நம்முடைய நெருங்கிய நண்பர்களை நாம் விருந்துகளுக்கு அழைப்போம். பிற சமயத்து நண்பர்களும் நம்முடைய உபசரிப்புக்கு உகந்தவர்களே. 'அன்னியரை உபசரியுங்கள்' என்பதே வேத ஆலோசனை. இந்து, முஸ்லிம் பள்ளி /கல்லூரி நண்பர்கள் பலரை எங்களுடைய இல்லத்தில் குடும்பமாக விருந்துக்கு அழைத்திருக்கிறோம் அவர்களுடைய வீடுகளில் நாங்களும் சாப்பிட்டிருக்கிறோம்.

ஒருமுறை எங்கள் தகப்பனாருடைய பாலிய நண்பரொருவர் எங்களை அவரது கிராம வீட்டிற்கு விருந்துக்கு அழைத்திருந்தார், நாங்களும் சென்றோம். காரியங்கள் இயல்பாக இல்லை என்று உணர்ந்தோம், ஆனால் என்னவென்று தெரியவில்லை. "நல்ல விசாலமான இடத்திலே ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்று சொல்லி நல்ல விருந்து கொடுத்து உபசரித்தார்.

பிறகுதான் எங்களுக்குத் தெரியவந்தது அவருடைய தாயார் அன்று காலை மரணமடைந்துவிட்டார் என்பது. பிற சமயத்தவரது விருந்தோம்பல் ஈடு இணையற்றது.

நற்செய்தியை நாம் யாருக்கோ அல்ல, நம் நண்பர்களுக்கும் அறிவிக்கக் கடமைப்பட்டவர்களே. சுவிசேஷப் பங்குகளை அவர்கள் கண்களில் படும்படி வைக்கலாம். அவர்களாகவே கேட்கும்போது புதிய ஏற்பாட்டினைக் கொடுக்கலாம்.

நாம் வாழ்க்கை நடத்தும் விதத்தைக்கொண்டே கிறிஸ்தவ விசுவாசத்தை உணர்த்தலாம். ஒருமுறை எனது நண்பர் ஒருவர் என்னைக் கேட்டார், "தாமஸ் நீங்களெல்லாம் எப்படி இறந்தோரின் உடலைச் சுற்றி உட்கார்ந்து பாடல் பாடுகிறீர்கள்" ? என்று. அப்பொழுது நம்முடைய நம்பிக்கையைக் குறித்து அவருடன் பகிர்ந்துகொள்ள முடிந்தது.

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாக குடும்பத்தில் யாரும் எதற்கும் லஞ்சம் கொடுப்பதில்லை. காரியங்கள் ஜெயமாகவே நடைபெறுகின்றன. பிற சமயத்தினர் வியப்புடன் "இது எப்படி"? எனக் கேட்கின்றார்கள். (நம்ம ஆளுங்களும் கேக்குறாங்க. அது வேற விஷயம்). எங்கள் தேவன் எங்களுக்காக செயல்படுகிறார் என சாட்சி பகர முடிகிறது.

பிற சமயத்தாரால் நாம் துன்புறுத்தப்படும்போதும், இடுக்கண்களைச் சந்திக்கும்போதும், எப்படி செயல்படுவது ? வாய்ப்புக் கிடைத்தால் அவர்களிடத்திலே நேரடியாகவே அறிவுரை கூறலாம். கேட்கவில்லையென்றால் தேவ எச்சரிப்பை உணர்த்தலாம்.

வட மாநிலங்களில் நடப்பதுபோன்ற வாழ்வாதாரங்களையே பாதிப்பிற்குள்ளாக்கும் பயங்கரவாதம் தலைவிரித்தாடும்போது அதிகாரிகளையும் நீதிமன்றங்களையும் நாடுவதில் தவறில்லை. வேதாகமத்தில் முன்னுதாரணங்கள் உண்டு. பவுலடியார் இராயனுக்கு அபயமிட்டிருக்கிறார். கூடுமானால் நம்மாலானமட்டும் எல்லா மனுஷரோடும் சமாதானமாயிருப்போம்.

'பிரியமானவர்களே. பழிவாங்குதல் எனக்குரியது, நானே பதிற்செய்வேன்'... (ரோமர் 12:18,19).

எல்லாவற்றிற்கும் மேலாக மலைப்பிரசங்கத்தின் நன்னெறிகள் நம்மை வழிநடத்தட்டும். எல்லாருக்காகவும் ஜெபிப்போம். ஜெபமே ஜெயம்.



பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

வசனத்தின்படி கடந்த மாதம் 25 ம் தேதி சென்னை ஹுழிஶ்ரீமிஷ்விமி சபையின் திருச்சபை மக்கள் தென் தமிழகத்தில் இறைப்பணியாற்றிய மிஷனெரிகள் நினைவிடங்களையும் அவர்கள் உருவாக்கிய பணித்தளங்களையும், ஆலயங்களையும் இன்றைக்கு இருக்கும் திருச்சபை வளர்ச்சிப் பணிகளையும் பார்வையிடுவதற்கு திருச்சபையின் போதகர் சுரேஷ் பீட்டர் அவர்கள் தலைமையில் ஆறு பேர்கள் வந்திருந்தார்கள். டோனாவூர் ஐக்கியத்தில் அவர்களுக்கான அனைத்து ஏற்பாடுகளும் செய்திருந்தார்கள். அதன் பின்னர் வரலாற்றுச் சங்கம் சார்பில் அவர்கள் நெல்லை மாவட்டத்தில் உள்ள மிஷன் வரலாற்றுச் இடங்களை சென்று நினைவுபடுத்தி வருவதற்கு ஏற்பாடுகளை செய்திருந்தார்கள்.

தூத்துக்குடி நாசரேத் திருமண்டல கதீட்ரல் ஆலயம் மற்றும் ஆர்தர் மார்காஷியஸ் ஐயர் பணிகளையும், மெஞ்ஞானபுரம் கனம் ஜாண் தாமஸ் ஐயர் பணிகளையும், அதன் பின்பு திராவிட ஒப்பிலக்கணத்தின் தந்தை பேராயர் கால்டுவெல் அவர்களின் நினைவிடம் பின்னர் அங்கிருந்து நெல்லையின் முதல் இரத்த சாட்சி தாவீது சுந்தரானந்தம் உருவாக்கின முதல் கிறிஸ்தவ கிராமத்தை பார்வையிட சென்றோம். மிஷனெரிகள் ஆற்றிய பணிகளையும் நினைவு கூர்ந்தோம், மிஷனெரிகள் ஆற்றிய சமுதாயப் பணிகளையும் நினைவுபடுத்தி பராபரனுக்கு நன்றி சொல்லி வந்தோம்.

## புத்தக அறிமுகம்

## நம்பியம்மாள்
## பெண் முதல் இரத்த சாட்சி

திருநெல்வேலி திருமண்டலம் பெண்கள் ஐக்கிய சங்கம் 62 வது உபவாச ஜெபதின தோத்திர பண்டிகையில் பேராசிரியர் அருள்திரு தே அ கிறிஸ்துதாஸ் அவர்கள் எழுதிய முதல் பெண் இரத்த சாட்சி நம்பியம்மாள் வரலாற்றுப் புத்தகம் திருநெல்வேலி திருமண்டல பேராயர் அம்மா அவர்களால் வெளியிடப்பட்டது.

திருநெல்வேலி திருமண்டல வடக்கு சபை மன்ற தலைவர் அருள்திரு இஸ்ரேல் தனசிங் அவர்கள் அறிமுகப்படுத்த திருமண்டல பேராயர் அம்மா அவர்களின் திருக்கரங்களினால் வெளியிடப்பட்டது.

இப்புத்தகம் வெளிவர உதவி செய்த பேராசிரியர் அருள்திரு தே அ கிறிஸ்துதாஸ் அவர்கள் குடும்பத்திற்கும், புத்தக பிரிண்ட் செய்ய நன்கொடை வழங்கிய நல்லூர் ஜெயராஜ் அன்ன பாக்கியம் கல்லூரி பேராசிரியர் சுரேஷ் சாலோமோன் அவர்களுக்கும் திருமண்டல பெண்கள் ஐக்கிய சங்க செயலர் அம்மா அவர்களுக்கும் எங்களுக்கு உதவி செய்த தங்கம் அக்கா அவர்களுக்கும் பேராயர் அம்மா அவர்களிடம் இப்புத்தகத்தை வெளியிட அனுமதி பெற்று தந்த பங்களா சுரண்டை சேகர குருவானவர் அம்மா அருள்திருமதி மேரி வில்சன் அவர்களுக்கும் கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.





# பரப்பாடி திருச்சபையின் சீர்மிகு வரலாறு

J. ஜான் ஞானராஜ், கல்லிடைக்குறிச்சி

**பரப்பாடி கிராம அமைவிடம்**

திருநெல்வேலி மாவட்டத்தில், நாங்குநேரி தாலுகாவில் திருநெல்வேலியிலிருந்து திசையன்விளை மற்றும் உவரி நோக்கி செல்லும் மாநில நெடுஞ்சாலையில் உள்ள ஒரு வீரம் மிகுந்த கிராமம் பரப்பாடி.

**கிறிஸ்தவத்தின் தொடக்கம்**

1798 - 1804 க்குட்பட்ட காலகட்டத்தில் சுமார் 60 க்கும் மேற்பட்ட கிராமங்களில் நற்செய்தியை அறிவித்து திருச்சபையை உருவாக்கி சுமார் 5000 க்கும் மேற்பட்டவர்களை கிறிஸ்துவுக்குள் கொண்டு வந்தவர்கள். தஞ்சாவூரில் இருந்து வருகை தந்திருந்த திரு கற்பகம் சத்தியநாதன் உபதேசியாரும் அவரோடு இணைந்து பணி செய்த முதலூரையடுத்த காலங்குடியிருப்பை தந்தை ஊராகவும், விஜயராமபுரத்தை தாய் ஊராகவும் கொண்ட சின்னமுத்து என்ற தாவீது சுந்தரானந்தம் உபதேசியாரும் ஆவர்.

திரு.கற்பகம் சத்தியநாதன் உபதேசியார் அவர்களுக்கும் தாவீது சுந்தரானந்தம் உபதேசியார் அவர்களுக்கும் இடையே சில ஆண்டுகளில் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் திரு.கற்பகம் சத்தியநாதன் உபதேசியார் தஞ்சாவூருக்கு திரும்பி சென்றார். அவர் தமது கடைசிக் காலத்தில் பரப்பாடி கிராமத்தில் சபை உருவாக்கியதாகக் குறிப்புகள் கொடுத்துள்ளதை அடிப்படையாகக் கொண்டு 1803 - 1804 இல் பரப்பாடி கிராமத்தில் கிறிஸ்தவம் தோற்றம் பெற்றுள்ளது என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது. ஆனால் கற்பகம் சத்தியநாதன் அவர்களுக்கு பின்னர் பரப்பாடி கிராமத்தை மேற்பார்வை செய்ய ஊழியர்கள் இல்லாத காரணத்தாலும், தாவீது சுந்தரானந்தம் உபதேசியார் இரத்த சாட்சியாக மரணம் அடைந்ததாலும், வடக்கு விஜயநாராயணம் பண்ணையாரின் ஆதிக்கம் காரணமாகவும் பரப்பாடி சபை முற்றிலும் நலிந்து போனது.

**பரப்பாடி கிராமத்தில் மீண்டும் கிறிஸ்தவம்**

பரப்பாடி கிராமத்தில் கிறிஸ்தவம் பரவியது குறித்து மகாகனம் சார்ஜென்ட் அத்தியட்சர் அவர்கள் தாம் மிஷனரியாக பணி செய்த காலத்தில் அறிந்துகொண்ட செய்திகளை அறிக்கையாக C.M.S மேலிடத்துக்கு அனுப்பினார்கள். அது C.M.R - Church Missionary Records எனும் மிஷன் ரெக்கார்டுகளில் அறிக்கையாக பதிவிடப்பட்டது. அதன்மூலம் இக்கிராமத்தின் தொடக்க கால வரலாற்றை நாம் சிறப்பாக அறிந்து கொள்ள முடிகிறது.

CMR - Church Missionary Records இல் குறிப்பிடப்பட்டுள்ள செய்தி

1849 இல் டோனாவூர் வட்டார தலைமை மிஷனரியாக Rev.C.T.E. ரேனியஸ் ஐயரவர்களின் மகன் Rev. சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் பணி செய்து வந்தார்கள். அக்காலத்தில் தந்தையைப் போன்று குதிரை மீதேறி வடக்கே அம்பாசமுத்திரம்

கல்லிடைக்குறிச்சி முதல் தெற்கே பணகுடி பேர்ப்பிலான்குளம் வரை பரந்து விரிந்திருந்த டோனாவூர் வட்டார கிராமங்கள் அனைத்திலும் அவர் சிறப்பாக நற்செய்தி அறிவித்து வந்தார். அவர் தமது தந்தை நெல்லை அப்போஸ்தலர் Rev ரேனியஸ் ஐயரவர்கள் காலத்தில் உருவாகி நலிந்து போன அனேக திருச்சபைகளை மீண்டும் புதுப்பித்தார்.

**பரப்பாடி கிராமம் சந்திக்கப்பட காரணமாக இருந்த தொடக்ககால சம்பவம்**

டோனாவூரிலிருந்து சுவிசேஷபுரத்திற்கு அங்குள்ள மிஷினரி Rev. சார்ஜெண்ட் ஐயர் அவர்களை சந்திப்பதற்காக குதிரையில் Rev. சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் பயணம் செய்து வந்த போது பரப்பாடியில் நடைபெற்ற ஒரு சம்பவம் பரப்பாடி கிராமம் கிறிஸ்து மார்க்கத்தை ஏற்றுக் கொள்வதற்கு மூல காரணமாக அமைந்தது.

**பண்ணையாருக்கு புத்தி சொன்ன யூஸ.சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள்**

1849 இல் பரப்பாடி கிராமம் பண்ணையார் ஒருவரின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. அந்த பண்ணையார் தமது அடியாட்களின் துணைகொண்டு பரப்பாடி கிராம மக்களை கொடூரமாக வேலை வாங்கி வந்தார்.

பரப்பாடியில் குளம் வெட்ட தீர்மானித்த பண்ணையார் பரப்பாடி பொதுமக்களை குளம் வெட்டும் பணியில் ஈடுபடுத்தி பணிகளை வேகமாக செய்யச் சொல்லி தனது அடியாட்களை கொண்டு பரப்பாடி மக்களை சவுக்கால் அடித்து கொடுமைப்படுத்தினார். தமது அடியாட்கள் பரப்பாடி பொதுமக்களை சவுக்கால் அடித்து கொடுமைப்படுத்தி வேலை வாங்குவதை தூரத்தில் இருந்த ஒரு மர நிழலில் அமர்ந்திருந்தபடி பண்ணையார் கண்காணித்து வந்தார். அதன் அருகில் சாலை ஒன்று காணப்பட்டது. அந்த சாலை வழியாக டோனாவூர் மிஷனரி Rev.சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் குதிரையில் சென்று கொண்டிருந்தார். பொதுமக்களை அடியாட்கள் மூலம் பண்ணையார் சவுக்கால் அடிப்பதை தூரத்தில் இருந்து கண்ட Rev. சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் மிகுந்த கோபம் கொண்டார். கோபாவேசத்துடன் தமது குதிரையிலிருந்து இறங்கி வேகமாக சென்று அடியாள் ஒருவரிடமிருந்து சவுக்கை பிடுங்கி மரநிழலில் அமர்ந்து கொண்டு தனது ஆட்கள் சவுக்கால் அடிப்பதை கண்காணித்துக் கொண்டிருந்த பண்ணையாரை சவுக்கால் அடித்து தண்டித்து கண்டித்ததோடு பொதுமக்களை மனிதராய் மதித்து நடத்துங்கள் இப்படி சவுக்கால் அடித்து துன்பப்படுத்துகிறீர்களே என புத்தி சொல்லி விட்டு தமது வழியே கடந்து சென்றார். இதை கண்டு அதிர்ச்சியடைந்த பண்ணையார் நிலைகுலைந்து போனார்.

இந்த காட்சியை பரப்பாடியிலுள்ள பொதுமக்கள் நேரில் கண்டார்கள். இந்த காட்சி பரப்பாடி மக்களின் மனதில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது.

**பரப்பாடி திருச்சபை உருவான வரலாறு**

தங்களுடைய நலனுக்காக ஒரு ஐரோப்பிய மிஷனரி மேற்கண்டவாறு செயல்பட்டதை பரப்பாடி கிராமத்தார் அனைவரும் உற்றுநோக்கி கவனித்தார்கள். அந்த ஐரோப்பிய மிஷனரி யார் என்பது குறித்து விசாரித்தார்கள் அவர் இயேசு கிறிஸ்துவை அறிவிக்கும் ஊழியர் என்பதைக் கண்டு கொண்டார்கள் தாங்களும் இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிந்துகொள்ள வேண்டும் என்று விரும்பினார்கள். அந்த ஐரோப்பிய மிஷனரி சுவிசேஷபுரத்திற்கு செல்கிறார் என்பதையும் அவர் டோனாவூரில் தங்கியிருந்து பணி செய்கிறார் என்பதையும் அறிந்து கொண்ட அவர்கள் சுவிசேஷபுரம் சென்றும், டோனாவூர் சென்றும், கிறிஸ்து மார்க்க சத்தியத்தை அவரிடம் கேட்டு அறிந்து கொண்டார்கள். 1849 - 1851 ஆகிய இரண்டு ஆண்டுகளுக்குள் பரப்பாடி கிராமத்தார் அனைவரும் கிறிஸ்தவரானார்கள். இதனை பிற்காலத்தில் பேராயரான Rev.சார்ஜண்ட் ஐயரவர்கள் குறிப்புகளாக குறிப்பிட்டுள்ளார்கள்.

பரப்பாடி மற்றும் சுற்றுக்கிராமங்களில் நேரடி கள ஆய்வு செய்கையில் முற்காலத்தில் வடக்கு விஜயநாராயணம் பண்ணையார் பரப்பாடி சுற்று வட்டாரத்தை ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளது குறித்து அறிய முடிகிறது.

**சபை வளர்ச்சியில் திரு. முத்தையா நாடார் அவர்களின் பங்களிப்பு**

இந்த காலகட்டத்தில் பரப்பாடி கிராமத்தில் திரு. முத்தையா நாடார் என்பவர் கிறிஸ்தவராக மாறி மிகுந்த கிறிஸ்து மார்க்க பக்தி கொண்டவராக காணப்பட்டார் என்றும் அவர் தமது முன்னோர்கள் வணங்கி வழிபட்ட புறமத கோவிலை அகற்றி விட்டு கிறிஸ்து மார்க்கம் பரப்பாடியில் வளர்வதற்கு பெரும் முயற்சிகளை செய்தார் என்றும் பரப்பாடி பாரம்பரிய செவிவழிச் செய்திகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. நாஞ்சான்குளம், மருதகுளம் போன்ற கிராமங்களை சார்ஜெண்ட் ஐயரவர்கள் நேசித்தது போல் பரப்பாடி கிராமத்தையும் அவர் நேசித்து செயல்பட்டுள்ளதை இந்த வரலாற்றின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

**பரப்பாடி தேவாலய வரலாறு**

பரப்பாடி கிராமத்தில் முதல் தேவாலயம் 10.12.1888 இல் நெல்லைப் பேராயராக பணிசெய்த மகாகனம். சார்ஜெண்ட் அவர்கள் மூலமாக தூய.திரித்துவ தேவாலயம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

முதல் தேவாலயம் பரப்பாடி சபை மக்களுக்கு ஆண்டவரை தொழுது கொள்ள போதுமானதாக இல்லாததால் பெரிதானதோர் தேவாலயம் கட்டப்பட்டது. இந்த இரண்டாம் தேவாலயம் 18.10.1919 அன்று நெல்லை பேராயர் மகாகனம் உவாலர் அவர்களால் தூய. திரித்துவ தேவாலயம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்த இரண்டாம் தேவாலய வைரவிழா 18.10.1979 அன்று பரப்பாடி சேகர குரு Rev.இஸ்ரவேல் தனராஜ் ஐயவர்களுடைய முன்னிலையில் நெல்லை பேராயர் மகாகனம். தானியேல் ஆபிரகாம் அவர்களது தலைமையில் மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது.

**பரப்பாடியில் புதிய தேவாலயம்**

பரப்பாடி இரண்டாவது தேவாலயம் சில ஆண்டுகளுக்கு முன்பாக முழுவதுமாக இடிக்கப்பட்டு. புதிய தேவாலய கட்டுமானத் பணிகள் தொடர்ந்து நடைபெற்று வந்தது. தற்போது அந்த பணிகள் நிறைவு பெற்று மிக சிறப்பானதொரு ஆலயமாகவும் மிக உயரமான கோபுரமும் தற்போதைய நெல்லை பேராயர் அவர்களால் 18.10.2022 அன்று பிரதிஷ்டை செய்யப்பட்டது.




# புரட்சிப்புயல் ஏமிகார்மைக்கேல்

**முனைவர்.த.ஜான்சி பால்ராஜ்**
நாவலாசிரியர் , திருநெல்வேலி
jansy.emmima@gmail.com

காலை 11 மணிக்கெல்லாம் காளைகள் வண்டிகளை இழுக்கத் தொடங்கிவிட்டன. பண்ணைவிளையை கடந்து சில மணி நேரங்கள் அந்தப் பிரிவின் ஆழ்ந்த துக்கம் பேசவிடாமல் அழுத்தியே வைத்திருந்தது. மதிய வெயிலில் வண்டிகளின் சக்கர சத்தமும் ஜல் ஜல்.. ஜல் …என்ற சலங்கையொலியும் தான் வழிநெடுகிலும் கேட்டுக் கொண்டே சென்றது.

அவர்கள் களக்காட்டை அடைந்த போது சூரியன் மெதுவாக மலைகளிடையே இறங்கிக் கொண்டிருந்தான். வெயிலின் வெட்கைத் தணிந்திருந்தது. தெப்பக் குளத்தை பார்த்ததும் வண்டிகளை நிறுத்தி எல்லோரும் இறங்கி சற்று நேரம் கழித்து பிறகு பயணிக்கலாம் என்றார் உவாக்கர்.

இன்னும் ஒருமணி நேரத்தில் டோனாவூருக்கு போய்விடலாம். என்றார் ஏமி.

தெப்பக்குளத்தில் மிதந்து கொண்டிருந்த அழகான தாமரை, அல்லி மலர்கள் அனைவரையும் முகம் மலர்ந்து புன்னகைக்க வைத்தன. விடாமல் அழுது கொண்டிருந்த குழந்தை இருண்ட வானில் நிலவைக்கண்டதும் பொக்கைவாய் திறந்து சிரித்தபடு விரல் நீட்டி இரசிப்பதைப் போல ஒருசேர அனைவரது பார்வையும் குளத்திற்குள் குவிந்தது. சிறுவன் ஒருவன் அதிலிருந்து விரிந்தும் விரியாமலும் மிதந்த சிலப் பூக்களை சிறு கவையொன்றால் இழுத்து இழுத்துப் பறித்து, கூடையில் சேகரித்ததைக் கவனித்த ஏமி…

இந்தப் பூக்களை எதற்காகப் பறிக்கிறாய் ? என்று அன்பு கமழ கேட்டார்.

இதுவா… .இது என் சாமிக்கு வேணும். அதான் பறிக்கிறேன்… என்றான்.

ஓ… அப்படியா. சரிசரி.. என்றார் ஏமி.

இந்தக் காட்சி அவர் மனதில் உயிரோவியமாய் பேசிக்கொண்டே வந்தது. எல்லோரும் களக்காட்டின் அழகான தென்றலையும் மேற்குத் தொடர்ச்சி மலைகளின் அணிவகுப்பையும் கண்ணைவிட்டு அகல மறுத்த அந்த வண்ண மலர்களையும் பற்றியே பேசிக் கொண்டு வந்தனர்.

ஏமி எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டே பதிலுக்கு தலையசைத்தும் புன்னகைத்தும் அமர்ந்திருந்தார். மலர்களிலும் மென்மையான சின்னஞ்சிறு பெண்குழந்தைகளை, கசக்கி இன்பம் நுகரும் இந்த விந்தைச் சமூகத்தில் அவிழாத மலர்களாய் தத்தளிக்கும் உயிர்ப்பூக்கள் கெட்டழியும் முன் கைநீட்டி இழுத்து சுத்தமான வாழ்க்கைக்கு நேராக நடத்தியே ஆக வேண்டும்… என்ற அவரது எண்ணவேட்கை மனத்திரையில் ஓடிக்கொண்டேயிருக்க, வண்டி டோனாவூரை நெருங்கி கொண்டிருந்தது…

அவரது ஆழ்ந்த சிந்தையில் பதிந்த அந்த வாசகத்தை அவரது நினைவுமனமறியாமலே வாய்த்திறந்து அந்தப் பூக்கள் என் சாமிக்கு வேணும்! என்றார் அந்தச் சிறுவனின் அதே பாவனையில்.

ஏமியம்மா… இன்னும் அந்தப் பையன் நினைவிலேயே இருக்காங்க போல.. என்றாள் லேசாக சிரித்தபடி பொன்னம்மாள்.

ஆமா…ஆமா… என்றதும்

சிலரின் சிரிப்பொலி. வண்டிச் சக்கரம் ஒன்று சற்று பெரிய கல்லில் ஏறி இறங்க எல்லோரின் தலையையும் வேகமாக மேலும் கீழுமாக ஆட்ட வைத்து விட்டது.

ஆனால் உவாக்கர் தன் மனைவியை திரும்பிபார்த்து லேசாக தலையசைத்தார். புரிந்ததா ? என்றது அந்தப் பார்வை. ம்…ம்…என்றார் பர்தாவும்.

ஒன்றன் பின் ஒன்றாக இரண்டு வண்டிகளும் டோனாவூர் ஆலய வளாகத்தருகில் வந்து நிற்க வழக்கத்திற்குமாறாக இன்று இரண்டு வண்டிகள் என்றதும்

காரணமறிய ஆங்காங்கே இருந்த மக்கள் கோவிலை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

அதிலும் ஏமியின் வண்டி என்றால் பெண்கள் கூட்டம் அதிகமாகவே வந்து சூழ்ந்து கொள்ளும். புடவைக் கட்டிய வெள்ளைக்கார பெண், அன்பால் ஈர்க்கும் அழகு பெண், ஆங்கிலம் பேச பழகிப்போன நாவால் தமிழை பழுதின்றிபேச முயற்சிக்கும் அந்த அழகு.... அனைத்தையும் சலிப்பின்றி எத்தனைமணிநேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருக்கலாம். ஏமியும் தமிழ்மொழியை கற்பதற்காகவே பெண்களோடு வெகுநேரம் உரையாட விரும்புவார்.

இன்று இன்னும் சில பெண்களோடு வந்து இறங்கிய ஏமி அனைவரையும் பார்த்து மகிழ்ச்சியோடு வணக்கம் தெரிவித்து அருகில் அழைத்தார். ஒரு சந்தோசமான செய்தி உங்களுக்கு சொல்லபோறேன்.

என்னது....என்னது...உடனே சொல்லுங்க....

இனி நானும் இந்த அக்காமார்களும் இங்கு உங்களோடுதான் இருக்கப்போகிறோம்.

அப்படியா..... ரொம்ப சந்தோசமா இருக்கு.

பேசிக் கொண்டிருக்கும் போதே உவாக்கரின் அறிவுரையினால் வேதப்பாட பயிற்சி வகுப்பிற்காக கட்டப்பட்டிருந்த மண் சுவர்களால் கட்டப்பட்ட ஓலைக் குடிசையை சுத்தப்படுத்திக் கொண்டிருந்தனர்.

ஆலய விரும்பிகள்.

இவுங்கல்லாம் யாரு எங்கிருந்து வந்தாங்க என்று நீங்கெல்லோரும் பார்ப்பது எனக்கு புரிகிறது. எல்லாவற்றையும் உங்களுக்கு நாளை சொல்கிறோம். சரியா. ?

ஏமியும் அவரோடு வந்தவர்களும் உவாக்கர் தம்பதியினரோடு டோனாவூரில் அடைக்கலமாகினர். அவர்கள் வந்த செய்தி ஓரிரு நாட்களுக்குள் சுற்றுவட்டாரம் முழுவதும் பரவியது. ஒருசில வாரங்களுக்குள் தமிழகமெங்கும் உள்ள தேவாலயங்கள் மூலம் ஏமியோடு இணையும் ஆதரவற்றப் பெண்கள் மற்றும் தேவதாசிப் பெண்ணான ப்ரீனா பற்றின செய்திகளும் பேசப்பட்டன.

ஏமி முழுநேரமாக தனது கவனத்தை தேவதாசி முறையைப் பற்றின முழுமையான வரலாற்றை அறிவதிலும் சமயப்பணி என்ற பெயரில் பெண்களுக்கு இளைக்கப்படும் இக்கொடுமைகளைத் தவிர்ப்பதற்கான வழிமுறைகளை கண்டுபிடிப்பதிலுமே செலவிட்டார்.

உவாக்கரின் அறிவுரையின்படி ஏமி எங்கெல்லாம் வாய்ப்பு கிடைத்ததோ அங்கெல்லாம் சென்று தேவதாசி முறை என்ற பெயரில் பெண் குழந்தைகள் அடையும் தவறான நிலையை எடுத்துரைத்தார். அந்தச் செய்திகளெல்லாம் மக்கள் ஏற்கனவே அறிந்தவைகள் தான், ஆனால் அவை தெய்வத்திற்கு தாங்கள் செய்யும் தொண்டாக கருதும் மனப்பான்மையை அதன்மூலம் பயனடைந்து வந்தவர்கள் ஏற்படுத்தி வைத்திருந்தனர். அதைத் தகர்ப்பதுதான் அன்றைய தேவையாக இருந்ததை கண்டு கொண்டார் ஏமி.

இரவு பகல் பாராமல் புனிதப்பணியாக ஆரம்பித்து பெண்களுக்கு எதிரான பாலியல் வன்புணர்வு செயலாக மாறிப்போன இத்தேவதாசி முறைக்கு எதிரான தனது



போரைத் தொடங்கினார். அவரோடு வந்தப் பெண்களிடமும் தனக்கிருந்த அதே வேட்கை தானாகவே தொற்றிக் கொண்டது.

டோனாவூரை சுற்றியுள்ள ஊர்களில் இருந்தும் சமூகத்தால் கைவிடப்பட்ட பெண்கள் ஏமியின் சேவையை கேள்விப்பட்டு சமூகத்தடைகளை தூக்கி எறிந்துவிட்டு அவர்களோடு வந்து இணைந்தனர்.

தேவதாசிமுறை என்ற பெயரில் பெண்ணடிமைத்தனம் எங்கெல்லாம் சர்வ சாதாரணமாக செயல்பட்டுக் கொண்டிருந்ததோ அங்கெல்லாம் ஏமியின் படை செல்லத் துணிந்தது.

அறியாமையும் ஏழ்மையும் மிகுந்திருந்த இடங்களில் தான் பெண் குழந்தைகளை விலைக்கு வாங்கி தங்களுக்கென்று தத்தெடுத்துக் கொள்ளும் நிலை தேவதாசியர்களிடையே நிலவியது. தேவதாசி முறைக்கு தங்கள் பெண் குழந்தைகளைத் தர விரும்பாத உயர்குலத்தவர்கள் விலை கொடுத்து அழகிய பெண் குழந்தைகளை வாங்கி கோவில்களுக்கு கொடுத்து சாமி குற்றம் வராமல் பார்த்துக் கொண்டனர்.

ஆண் குழந்தை மோகத்தில் தொடர்ச்சியான பெண் குழந்தைகளை பெற்றுத் தள்ளும் குடும்பங்களில் மிக எளிதில் குழந்தைகளை கோவில்களுக்கு இடம்மாற்ற செய்ய முடிந்தது.

குழந்தைகளை விரும்பாத பெற்றோருக்கும் இயற்கையின் தன்மையால் குழந்தைகள் பிறந்து விடும்போது அவற்றை பதிவிருந்து பெற்றுக் கொள்ள துடிக்கும் கணிக்கையர்கள் பணத்தை வெகுமதியாக அளித்து வாரி கொண்டு சென்றனர். பல கோவில்களில் பெண் குழந்தைகள் தேவதாசியர் என்ற புனிதப் பெயரோடு ஆணினத்தின் உடல் தேவையை பூர்த்திச் செய்யும் விலைமாதுக்களாகவே வளர்க்கப்பட்டனர். அறியாமையாலும் ஏழ்மையாலும் அப்பாவி குழந்தைகள் பலிகடாக்களாக்கப்பட்டனர்.

இவர்களுக்கு எதிராகப் போராடுவதற்கான அமைதிப்படை ஒன்றை உருவாக்கும் முனைப்பு ஏமியிடம் வினாடிகள் தோறும் வளர்ந்து கொண்டே இருந்தது.

அம்மா.... என்று அழைத்துக்கொண்டே தேவாயி அவசர அவசரமாக அந்த அறைக்குள் நுழைந்தாள். ஏதோ கொடுந்தகவல் கொண்டுவந்த ஒற்றனைப் போல் அங்குமிங்கும் திரும்பி பார்த்தபடி ஏமிக்கு மிக அருகில் வந்து கிசுகிசுத்தாள்.

இங்கு யாருமில்ல தேவாயி. சும்மா சத்தமாதான் சொல்லேன்.

அதுமா.... உங்களைத் தேடி ஒரு விதவைப் பெண் அவள் மகளோடு

அழுதெகிட்டே வந்திருக்கா. வாங்க....வெளியே என்றாள்.

ஏமி, உள்ளே வாம்மா.... என்றார் கையசைத்து.

அந்தப் பெண் தன் சிறு மகளை அணைத்தபடி தேம்பித் தேம்பி அழுதாள். ஒல்லியான தேகம்... ஒட்டிய முகம்... கண்ணீர் இருபக்க தாடைகளிலும் தங்குதடையின்றி வழிந்தபடி. இரண்டு கைகளாலும் கண்ணீரை துடைத்த ஏமி அழாதே. உள்ள வா... என்று அழைத்து போனார். சில நிமிடங்கள் அமைதியடைய நேரம் கொடுத்த ஏமி... இப்ப சொல்லுமா. என்ன நடந்தது.?

ஒரு மாசத்துக்கு முன்னால் என் வீட்டுகாரர் இறந்துட்டாரு. இவள் எனக்கு ஒரே மகள். இப்போது இவளையும் என்னிடமிருந்து பிடுங்கி மாரயம்மன் கோவிலில் தேவதாசியா பொட்டுக்கட்டணுமுண்ணு எங்க மாமியா வீட்டில் எல்லோரும் சொல்றாவ. எனக்கு இவளை விட்டா வேறு யாரும் இல்லை. என்றவள் வாய்பிழந்து... ஆ...ஆ....ஆ...ஆ என்று அழ தொடங்கினாள்.

அவளை அரவணைத்து, அழாதே. நான் உன்னையும் உன் மகளையும் பாதுகாக்கிறேன் என்றதும். அவள் அழுகை சற்று தணிய தொடங்கியது.

அதுசரி, பெருமாள் கோவிலிலும் சிவன் கோவிலிலும் தானே தேவதாசிகள் இருப்பதாக நான் அறிந்திருக்கிறேன். மாரியம்மன் கோவிலும் உண்டா? என்றார் ஏமி.

விசயம் அறிந்த உவாக்கர் தம்பதியினர், ஆமா..... கொஞ்சம் கொஞ்சமாக அது பெண் தெய்வக் கோவில்களிலும் நுழைந்து ரொம்ப காலமாயிருச்சி என்றார் உவாக்கர். மேல்மட்டத்தினரின் வாழ்க்கை முறையை மற்றவர்களும் அவரவர் வசதிகளுக்கு ஏற்ப மாற்றிக் கொள்வதுதானே இயல்பு..?

ஆமா... எங்க தாத்தாவுக்கு அப்புச்சி காலத்திலிருந்தே எங்க குலதெய்வம் மாரியம்மன் தான். ஒவ்வொரு குடும்பத்திலேயும் ஒரு பொட்ட புள்ளைய இப்படி தேவதாசியா கொடுத்துட்டுதான் வாறாவ. என்றாள் அந்தப் பெண்.

மேலவெளச்சி எங்க அம்மா ஊரு. அங்கேயும் ஒரு கோயில் இருக்கு. அதிலும் இப்ப மூணுபேர் தேவதாசியா இருக்காவ. ஒரு வயதானவளும் இரண்டு இளம் வயசுகாரிகளும் என்றாள் அழுகையொடு.

தேவாயின் கண்கள் தீம்பிழம்பாகி உதடுகள் பொறுமின...

ஏமிக்குள் எரிந்துகொண்டிருந்த நெருப்பும் பல மடங்கு விரிந்து எழும்பி எழும்பி எரிந்தது.

கோவிலுக்கு கொடுக்கப்படும் குழந்தைகள் பற்றின தகவல்களை முதலில் நாம் சேகரிக்க வேண்டும். என்றார் ஏமி.

ஆமா...ம்மா..

என்னிடம் சில ஐடியாக்கள் இருக்கு தேவாயி. இன்றைக்கே நாம் ஆரம்பிப்போம். சரி சரி என்றாள் தேவாயி.

தாயும் சேயும் ஏமியின் குடும்ப உறுப்பினர்களாகினர்.

**வேட்டைத் தொடங்குயது....**

# வரலாற்றுச் சங்கம்

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

**பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள்.** (உபாகமம் 32:7)

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்ப்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்ப்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துகின்றோம்:-**

தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக் கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனெரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1600 க்கு மேற்பட்ட வாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.

- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல் கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.
- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல

ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனெரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனெரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனெரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனெரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனெரிகள் அர்பணித்த நம் இந்திய மிஷனெரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனெரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனெரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

